




# கல்கி

1977 பிப்ரவரி 20

அநல ௵

மாசி 9





ராஜாஜி சிந்தனை

## தேர்தல் சாணக்கியம்

● சமீபத்தில் திரு எச். வி. காமத் என்னுடன் ஒரு பிரச்னையை விவாதித்தார். சர்வாதிகாரத்தை எதிர்க்கும் எல்லாக் கட்சிகளின் அகில இந்திய மகாநாடு கூடித் தேர்தல் சாணக்கியத்தை யதார்த்த ரீதியில் உருவாக்க வேண்டும்; மும்முனைப் போராட்டம் காரணமாக சர்வாதிகாரக் கட்சி வெற்றி பெறுவதைத் தவிர்க்க வேண்டும் என்ற யோசனையை வெளியிட்டார்.

காங்கிரஸ், கம்யூனிஸம் ஆகியவற்றை எதிர்க்கும் எல்லாக் கட்சிகளின் தலைவர்களும் ஒன்று கூடி தொகுதிகளைத் தங்களுக்குள் பிரித்துக் கொள்ளும் ஒரு திட்டத்தை வகுப்பது சிரமம் அல்ல. இதன் மூலமே நாடாளு மன்றத்தில் சர்வாதிகாரத்துக்கு எதிராக பெரும்பான்மை பலம் பெற முடியும். நாம் குறை காணும் காங்கிரஸ் கொள்கைகள் அனைத்திலும் சர்வாதிகாரம் என்பதே மிக முக்கியமானது. அது தேசத்தின் முன்னேற்றத்துக்கும் ஜனநாயகத்துக்கும் விரோதமானது. இதனோடு போராடி வெற்றி பெறுவது மும்முனைப் போராட்டம் இருக்கும் வரை சாத்தியமில்லை என்பது தெளிவு.

—சுயராஜ்யா, நவம்பர் 4, 1961

● நாடாளுமன்றத்துக்கும் மாநிலச் சட்டசபைகளுக்கும் தேர்தல்கள் தனித் தனியே வெவ்வேறு நேரத்தில் நடப்பது மிகவும் அவசியம். அப்போதுதான் பிரச்னைகள் தனித் தனியே தெளிவாகப் பிரிவுபட்டு உண்மையான பிரதிநிதித்துவ சர்க்கார், மத்தியிலும் மாநிலத்திலும் உருவாக முடியும்.

—சுயராஜ்யா, ஆகஸ்டு 17, 1963





# பொம்மைகள் உலகம்!

ஒரு சந்தர்ப்பத்தில் ஸ்விஸ் விமானம் ஒன்றில் சீனிவாசன் நாலரை மணி நேரப் பிரயாணம் செய்ய வேண்டியிருந்தது. பக்கத்தில் அமர்ந்திருந்த ஒரு ஐரோப்பிய மாது தன் கைப்பெட்டியிலிருந்து ஒரு பொம்மையை எடுத்து அடிக்கடி பார்த்து ரசித்து மகிழ்ந்து கொண்டிருந்தாள். சீனிவாசன் மெதுவாகப் பேச்சுக் கொடுத்தார்.

''இந்தப் பொம்மையை ஜப்பானில் வாங்கினேன். மிக அழகாக இருக்கிறது. அதை விட இந்தப் பொம்மைக்குப் போட்டிருக்கும் இந்திய பாணி உடை நன்றாக இருக்கிறது'' என்றாள் அந்த அம்மாள்.

''உங்கள் குழந்தையிடம் நீங்கள் இந்த பொம்மையைக் கொடுக்கவே யில்லையே?'' என்று மறுபக்கத்திலிருந்த சிறுமியைச் சுட்டிக் காட்டினார் சீனிவாசன்.

''ஹூஹூம்! பொம்மை அழுக்காகிவிடும்'' என்று தலையை அசைத்து விட்டாள். அந்தப் பிரயாண நேரத்தில் சீனிவாசன் தொடர்ந்து எண்ணிக் கொண்டே இருந்த வகையில் நூற்றிப் பதினெட்டுத் தடவைகள் அந்தப் பொம்மையை அந்த அம்மாவே எடுத்து எடுத்துப் பார்த்துக் கொண்டிருந்தாளாம்!

விமானத்தை விட்டு இறங்கிய போது சீனிவாசனுக்கு ஒரே பெருமிதம்! காரணம், அவரது ஜாய் டாய்ஸ் தொழிற்சாலையில் தயாரிக்கப்பட்டு ஜப்பானுக்கு ஏற்றுமதி செய்யப்பட்ட பொம்மை அது!

வியாபார நிறுவனங்களில் கணக்குப் பரிசோதகராக இருந்த நபர், ஒருநாள், கலகலவென்று பேசித் தள்ளும் பிளாஸ்டிக் பொம்மைகளையும், குழந்தைகளுக்கு பொது அறிவையும் பொழுது போக்கையும் இணைந்து அளிக்கும் விளையாட்டுச் சாதனங்களையும் தயாரித்துக் கொடுப்பவராக மாறுவார் என்று யாராலும் கணித்திருக்க முடியாது.

சென்னையில் அலுவல் பார்த்துக் கொண்டிருந்த சீனிவாசனை, நைஜீரிய நாட்டிலிருந்து விடுமுறையில் தாயகத்திற்கு வந்திருந்த நண்பர் ஒருவர் வற்புறுத்தி, நைஜீரியத் தொழில் நிறுவனம் ஒன்றிற்கு நிர்வாகப் பொறுப்பில் அமர்த்த அழைத்துச் சென்றார். அங்கே ஏற்றுக் கொண்ட பொறுப்பின் காரணமாக சீனிவாசன் அடிக்கடி ஜப்பானுக்கும், இத்தாலிக்கும் ஜெர்மனிக்கும் போக வேண்டியிருந்தது. ஜெர்மனியில் குழந்தைகள் விளையாட பொம்மை தயாரிக்கும் விதம் அவர் மனத்தில் பதிந்தது. 'வெறும் பொழுது போக்குக்காக மாத்திரம் பொம்மைகள் உருவாகவில்லை. அந்தப் பொம்மைகள் ஒவ்வொன்றும் குழந்தைகளின் பொது அறிவை அபிவிருத்தி செய்யவும் உதவுகின்றன' என்பதை சீனிவாசன் கவனித்தார். அந்தக் கணத்திலேயே, சீனிவாசன் உள்ளத்தில், தமக்கும் இப்படி ஒரு வாய்ப்புக் கிடைத்தால், குழந்தைகள், அறிவிற்கும் பொழுது போக்கிற்கும் உபயோகப்படும் பொம்மைகள் தயாரிக்க முடியும் என்ற எண்ணம் வளரத் தொடங்கியது.

நைஜீரியாவில் தொழில் நிறுவனங்கள் தேசிய மயமாக்கப்பட்ட போது சீனிவாசன், தாயகம் திரும்பினார். திரும்பி வந்து முதல் காரியமாக, பொம்மை தயாரிப்பில் தம் கவனத்தைச் செலுத்தத் துவங்கினார். 'வரதா மெட்டல் இண்டஸ்ட்ரீஸ்' என்று பெயரில் ஒரு நிறுவனத்தை அமைத்தார்.

இவர் கற்பனையில் உருவாக்க நினைத்த பொம்மைகளுக்கு சில வெளிநாட்டு உபகரணங்கள் தேவைப்பட்டன. அவைகளை இறக்குமதி செய்ய மனுப் போட்ட போது, ஐந்து லட்ச ரூபாய் பெறுமானமுள்ள பொம்மைகளை ஏற்றுமதி செய்ய வாய்ப்பிருந்தால் தான் இறக்குமதிக்கான அனுமதி கிடைக்கும் என்று அரசாங்கம் அறிவித்தது.

சீனிவாசனுக்கு இப்போது நைஜீரிய நாட்டு நண்பர்கள் உதவ முன் வந்தார்கள். இவர் என்னமாதிரிப் பொம்மைகள் தயாரிக்கப் போகிறார் என்பதைப் பற்றிக் கவலையே படாமல், ஐந்து லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள பொம்மைகளுக்கு உடனடியான 'ஆர்டர்' கொடுத்தார்கள். இதற்கு நன்றி தெரிவிப்பதே போல் தமது இல்லத்துக்கு இன்று நைஜீரியா ஹவுஸ் என்று பெயர் சூட்டியுள்ளார். விரைவிலேயே நைஜீரியா ஆர்டரை திருப்திகரமாகப் பூர்த்தி செய்தார். அப்புறம் இத்தாலிக்கும் ஜப்பானுக்கும் ஏற்றுமதி செய்ய ஆரம்பித்தார். இப்போது அமெரிக்காவிற்கும் போக ஆரம்பித்திருக்கிறது. இன்று சீனிவாசன் பத்து சதவிகிதத்திற்குத் தான் இறக்குமதிப் பொருள்களைத் தமது பொம்மைகளில் உபயோகிக்கிறார். சீக்கிரமே அவைகளையும் இங்கே தயாரிக்கலாம் என்ற நம்பிக்கை இவருக்கு உண்டு.

இவர் தயாரிக்கும் பொம்மைகளுக்கு என்ன பெயர் சூட்டலாம் என்ற கேள்வி எழுந்தது.

''சீனிவாசன்! நீங்கள்தான் எப்பவுமே குஷியாக (Joy)ப் பேசிப் பழகுபவராயிற்றே! உங்கள் பொம்மைகளும் உங்களைப் போலவே குஷியாக இருக்கட்டும். ஜாய் டாய்ஸ் (Joy Toys) என்று பெயர் வையுங்கள்'' என்றார் ஒரு நண்பர். அந்தப் பெயர் நிலைத்துவிட்டது.

ஜெனீவாவிலுள்ள ஒரு விமானக் கம்பெனி தன் கம்பெனி மூலம் விமான டிக்கெட் வாங்கிப் பிரயாணம் செய்பவர்களுக்கு இலவசமாக ஒரு கைப்பெட்டியை அன்பளிப்பாகக் கொடுக்கும்.

அந்தக் கம்பெனி நிர்வாகியை ஒரு தடவை சீனிவாசன் அணுகினார். ''ஒவ்வொரு தடவையும் நீங்கள் கைப்பெட்டியைக் கொடுக்கிறீர்களே!... இந்தத் தடவை, இந்தப் பொம்மைகளையும் பக்கத்தில் வையுங்கள். எத்தனை நபர்கள் பொம்மைகளை விரும்புகிறார்கள், எத்தனைப் பேர்கள் பெட்டிகளை எடுத்துக் கொள்கிறார்கள் என்று பார்க்கலாம்'' என்றார்.

அன்று நூற்றித் தொண்ணூற்றி இரண்டு பிரயாணிகளில் நூற்றி அறுபத்தி இரண்டு பிரயாணிகள் பொம்மைகளை விரும்பினார்கள். சீனிவாசனுக்கு வெளிநாடுகளில் தம் பொம்மைகளுக்கு நல்ல 'மார்க்கெட்' இருக்கிறது என்பதும் நிச்சயமாயிற்று.

நம்முடைய அந்த நாளைய தஞ்சாவூர் பொம்மை பாணியில் ஒரு பிளாஸ்டிக் தாத்தா பொம்மை. ஆனால் ஜப்பானிய பாணி தொழில் நுணுக்கங்களுடன் தயாரானது. அதன் சிரித்த வாயில் ஒரு சிறிய இடைவெளி. அதுவே குழந்தைகளுக்கு சிறு சேமிப்பை ஊக்குவிக்கும் உண்டியலாகவும் உதவுகிறது. இந்தப் பொம்மைகளைப் பள்ளிகள், பாங்குகள், வாங்கிக் குழந்தைகளுக்குக் கொடுக்கின்றன.

பேசும் பொம்மை. ஒன்றரை அடி உயர பொம்மை. அதை எடுத்து அணைத்துக் கொண்டால் கலகலவென்று சில நிமிடங்கள் பேசும்! இந்தப் பொம்மைகளுக்கு வெளிநாடுகளில் கிராக்கி.

சத்தம் போடும் டார்ச் லைட். சிறுவர், சிறுமியர், தனியாக இரவில் இந்த டார்ச் லைட்டைப் போட்டுக் கொண்டு வழி நடக்கும் போது, உதவி ஏதும் தேவைப்பட்டுக் குரல் எழும்பவில்லையானால், இந்த டார்ச் லைட்டை உடம்போடு அணைத்துக் கொண்டால் போதும் ஒரே கூக்குரல் ஒலி, போலீஸ் சைரன் போலக் கிளம்பும். உதவியும் கிடைக்கும். இரவு நேரங்களில் வயல் வெளிகளில் நடப்பவர்களுக்கு, பூச்சிப் பொட்டுக்களை விரட்ட இந்த ஒளியும் ஒலியும் உதவும்!

சாதாரணமாகக் காய்ந்து கீழே விழும் தென்னை மட்டைகளைக் கூட வீணாக்கவில்லை சீனிவாசன். அவைகளை அடுப்பில் போட்டு எரித்து வீணாக்குவதற்குப் பதிலாக, அந்த கரும் சிவப்பு மட்டைகளைப் பதப்படுத்தி, பெரிய மீன் உருவத்தில் வெட்டி, வயிற்றுப் பகுதியில் 'இங்கே கிடைக்கும்' என்ற வாசகத்தை ஆங்கிலத்தில் எழுதி, ஆயிரக்கணக்கில் ஆப்பிரிக்க நாடுகளுக்கு ஏற்றுமதி செய்கிறார். அங்கே, மீன் கடைகளில் இந்தத் தென்னை மட்டை போர்டைத் தொங்க விடுகிறார்கள் விளம்பரமாக.

ஐந்து ரூபாய் அடக்கத்தில் மீன் உருவமாகத் தயாரிக்கப்படும் தென்னை மட்டை ஏழு ரூபாய் விலையில் ஏற்றுமதியாகிறது. முயன்றால் குப்பையையும் காசாக்கலாம் என்பதற்கு இது ஓர் உதாரணம்.

பங்களூரில் ஊதுபத்தி வியாபாரி ஒருவர் அழகான மரக்கட்டைகளைப் பெயிண்ட் அடித்து ஊதுவத்தி ஸ்டாண்டுகளாக விற்றுக் கொண்டிருப்பதைக் கவனித்தார். 'ஊதுவத்தி புகையாத நேரங்களில் அந்த ஸ்டாண்டு உபயோகம் இல்லாமல் தானே இருக்கும். அப்போது அது குழந்தைகளின் விளையாட்டுப் பொருளாகவும் இருக்கலாமே' என்று யோசித்தார்.

விலைவு, தவளை, கோழி, கிளி, பறவைகள் முதலிய உருவங்களில், உருவத்துக்கேற்ற ஓசையை எழுப்பக்கூடிய ஊதுவத்தி ஸ்டாண்டுகளைக், குறைந்த விலையில் தயாரித்தார். பன்னிரண்டு ரகங்கள்! பன்னிரண்டு ஓசைகள்! நல்ல வரவேற்பு.

''குழந்தைகள் முகங்களில் சிரிப்பைக் காண்பதே என் தொழிலின் லட்சியம்'' என்கிறார் நண்பர் கே. வி. சீனிவாசன்.

–கோமதி ஸ்வாமிநாதன்







# தேசத்தின் அஞ்சலி

ராஷ்டிரபதி என்ற முறையில் பக்ருத்தீன் அலி அஹமத் அவர்கள் பிறப்பித்த கடைசி உத்தரவு தேர்தலை அறிவித்ததுதான் என்பதை நினைக்கும் போது ஜனநாயகப் பற்றுள்ள ஒவ்வொரு பாரதக் குடிமகனின் நெஞ்சமும் நெகிழ்கிறது.

தேர்தலை அறிவித்த கையோடு அவர் பாரத மக்களுக்கு விடுத்த கடைசிச் செய்தியையும் நினைவில் கொள்ள வேண்டும்:

''காழ்ப்புணர்ச்சிகளையும் மனக் கசப்புக்களையும் விட்டொழித்து, அமைதியான சூழலில் கொள்கை விளக்கங்களைச் செய்து தேர்தலை நடத்துங்கள். ஜனநாயகத்தில் வன்முறைகள், கட்டுப்பாடின்மை ஆகியவற்றுக்கு இடமில்லை.''

''அவருக்கு நாம் செலுத்தும் சிறந்த அஞ்சலி அவரது இந்தக் கடைசி விருப்பத்தை இம்மியளவும் பிசகாமல் நிறைவேற்றுவதே'' என்று பிரதமர் கூறியுள்ளதை முழு மனத்துடன் பாரத மக்கள் ஆமோதிப்பார்கள்.

தமது மிக உன்னத அறிவாலும் பண்பாலும் கலாச்சார மேம்பாட்டாலும் தேச பக்தியாலும் அனுபவங்களாலும் தேசத்தின் மிக உயர்ந்த அரியாசனத்தை அலங்கரிக்கும் தகுதி பெற்றார் அகமத் அவர்கள். அதே சமயம் தமது எளிமையால் அதைவிட உயர்ந்த சிம்மாசனமான மக்களின் இதய பீடங்களிலே வீற்றிருக்கும் பெருமைபெற்றார். தொடர்ந்து அங்கே இடம் பெற்றிருப்பார் நாளும் இந்த தேசத்துக்குப் பெருமை சேர்ந்த அந்தப் பெருமகன்.

# சர்வாதிகாரம் - நமது ஒரே எதிரி!

ஆசார்ய கிருபளானி

சுதந்திரத்துக்கு இன்று பெரும் அபாயம் ஏற்பட்டுள்ளது. இந்த அபாயம் பிரிட்டிஷ் ஆட்சியில் இருந்ததை விட அதிகமானது. இந்த அபாயத்தை எதிர்த்துப் போராட சுதந்திரப் போராட்டத்தின் போது செய்த அளவுக்கு தியாகம் செய்ய மக்கள் தயாராக இருக்க வேண்டும்.

நாட்டில் நெருக்கடி நிலையைப் பிரகடனப்படுத்திய பதினெட்டு மாதங்களில் மக்களின் ஜீவாதார உரிமைகளும் சுதந்திரங்களும் நீதிமன்ற சுதந்திரமும் சட்டத்தின் ஆட்சியும் பறிக்கப்பட்டுள்ளன. இத்தகைய அரசு மீண்டும் ஆட்சி பீடம் ஏறி ஆறு ஆண்டுகளுக்கு ஆட்சி செலுத்த அதிகாரம் வழங்கப்பட்டால் இதே காரியங்களைத் தொடர்ந்து செய்யாதா? அப்போது நாட்டின் நிலைமை என்னவாகும்?

பரந்து விரிந்த இந்திய நாட்டில் ஒரு பகுதியில் — குஜராத் மாநிலத்தில் மட்டும் ஒரு சிறு அளவுக்கு வன்முறை

ஜனநாயகம் என்று உதட்டளவில் பேசுகிறார்களே யொழிய இன்று எல்லா அதிகாரங்களும் மத்திய அரசிடம் அதிலும் முக்கியமாகப் பிரதமரிடம் சென்று குவிந்திருப்பதைக் காண்கிறோம். ஆட்சி அதிகாரங்கள் மட்டுமல்ல, கட்சி அதிகாரங்களும் இப்படியே அவரிடம் குவிந்துள்ளன.

தாம் வகித்த முக்கிய இலாகாக்களை சக மந்திரிகளிடம் கொடுக்க ஒப்புக்கொண்டதன் மூலம் மேற்கு வங்க முதலமைச்சர் பதவியைக் காப்பாற்றிக் கொண்டு விட்டார். ஆனால் இப்படிச் சரணாகதியடைந்து பதவியைக் காப்பாற்றிக்கொள்ளச் சம்மதப்படாத உ. பி., ஒரிசா முதலமைச்சர்கள் தங்கள் பதவியை இழக்க நேரிட்டது. ஒரு கூட்டாட்சி அமைப்பில் மத்திய அரசு இப்படியா இயங்குவது?

லோக சபைத் தேர்தலுக்குக் கட்சி வேட்பாளர்களைத் தேர்ந்தெடுக்கும் முழு உரிமையையும் பிரதேசக் காங்கிரஸ் கமிட்டிகள் பிரதமரிடமே

கல்கி மலர் 36 இதழ் 30



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற — எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

ஏற்பட்டதற்காக நாடு முழுமைக்கும் நெருக்கடி நிலையைப் பிரகடனம் செய்ய வேண்டுமா? பிரிட்டிஷ் ஆட்சி காலத்திலும் எங்காவது ஒரு பகுதியில் இத்தகைய கலவரம் நடைபெற்றது. இதற்காக மிஸா சட்டம் அதாவது உள்நாட்டுப் பாதுகாப்புச் சட்டம் பிறப்பிக்கப்படவில்லை.

ஜனநாயகத்தில் எதிர்க் கட்சி என்பது அரசின் ஓர் அங்கமாகவே கருதப்பட வேண்டும். இப்படிக் கருதாமலும் எதிர்க் கட்சிக்கு மதிப்பளிக்காமலும் நடந்துகொள்கிற ஆட்சி ஏக கட்சி ஆட்சி அல்லது எதேச்சாதிகார ஆட்சியாகவே எண்ணப்படும்.

வறுமையை ஒழிக்க வேண்டுமானால் பெருமளவு வேலை வாய்ப்புக்களை உருவாக்க வேண்டும். இதைத்தான் காந்திஜி தமது நிர்மாணத் திட்டங்கள் மூலம் வற்புறுத்தினார். ஆனால் இன்றோ வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிக்க, காரிய சாத்தியமான திட்டமின்றியே ஏழைமை ஒழிப்புக் கோஷத்தை மட்டும் அரசும் ஆளும் கட்சியும் எழுப்புகின்றன.

அளித்து விட்டன. பார்லிமெண்டரி போர்டு முடிவு செய்வதற்குப் பதிலாக மாநில வேட்பாளர்களின் பட்டியலைப் பிரதமரே தீர்மானிக்கிறார்.

ராஷ்டிரபதி, உப ராஷ்டிரபதி, பிரதமர், சபாநாயகர் ஆகியவர்கள் சட்டத்தின் சன்னிதானத்தில் சமமானவர்கள் அல்ல — மேம்பட்டவர்கள் என்று சட்டத் திருத்தங்கள் செய்து நீதிக்கு முன் அனைவரும் சமம் என்ற அடிப்படை ஜனநாயகத் தத்துவத்தை அழித்து விட்டார்கள். இந்த ஓர் அம்சமே போதும் இந்தியாவில் நிலவுவது ஜயநாயகமா அல்லது யதேச்சாதிகாரமா என்ற ஐயத்தை எழுப்ப.

பிரிட்டனில் சமீபத்தில் அரசகுமாரி ஆன் காரோட்டும்போது வேகக் கட்டுப்பாட்டினை மீறியதற்காகத் தண்டனை பெற்றாள். வேகமாய்த் தேரோட்டிக் கன்றைக் கொன்ற தன் மகனுக்குத் தேர்ச் சக்கரத்திலேயே மரணம் சம்பவிக்கச் செய்த நீதி வழுவா மன்னன் கதை நமக்குத் தெரியும்.

சட்டத்தின் முன் எல்லோரும் சமம் என்ற நிலை இருந்தாலொழிய நீதி மன்

றங்கள் எப்படிச் சுயேச்சையாக இயங்க முடியும்?

நீதிபதிகளின் தீர்ப்பை மதித்து ஏற்காமல் சட்ட விளக்கங்களை மக்கள் கூட்டத்திலிருந்து எதிர்பார்க்கும் நிலைமையை அனுமதித்துவிடக் கூடாது.

பிரதமரின் தேர்தல் செல்லாது என்று அலகாபாத் உயர்நீதி மன்றம் தீர்ப்பு அளித்ததை யொட்டி பிரதமரின் இல்லத்தின் முன் மக்கள் கூட்டம் சென்று அவருக்கு ஆதரவும் விசுவாசமும் தெரிவித்தது. இதனைப் பிரதமர் எப்படி ஏற்றுக் கொண்டார் என்பது எனக்கு இன்னும் புரியாத புதிராகவே இருக்கிறது. சட்டத்துக்கு நீதிமன்றம் ஒரு விளக்கம் அளிக்கிறது. முதிர்ந்த அனுபவம் வாய்ந்த நீதிபதிகள் அளித்த தீர்ப்புக்கு மாறாக மக்கள் கூட்டம் ஒரு விளக்கம் தருகிறது. இந்த விளக்கங்களை அரசு ஏற்கும் நிலை வந்தால் சமுதாயத்தில் சிறுபான்மையினருக்கு நீதி கிடைக்காமலே போய்விடும்.*

கொள்கை, திட்டம் ஏதுமின்றி எதிர்க் கட்சிகள் அனைத்தும் ஒன்று சேர்ந்துள்ளன என்று பிரதமர் குற்றம் சாட்டுகிறார். பலதரப்பட்ட கட்சிகள் ஒன்று சேர்வதா என்பதல்ல பிரச்னை; சர்வாதிகாரத்தை அனுமதிப்பதா என்பதுதான் முக்கிய பிரச்னை.

இன்று நாம் ஒரு நெருக்கடியான நிலையில் இருக்கிறோம். இது ஆபத்தான நேரம். இந்த அரசாங்கத்துக்கு எதிராக உள்ள அனைவரும் ஒன்றுபட வேண்டியது அவசியம்.

சட்டத்துக்குப் பணிவது என்பது ஒவ்வொரு தனிமனிதனின் கடமையுமாகும். அதே சமயத்தில் ஜனநாயக அமைப்பில் தனிமனிதன் சுதந்திரம் நிலைக்கும் வண்ணம் பார்த்துக்கொள்ள வேண்டியதும் அவன் கடமை. இவ்விரண்டுக்கும் மோதல் எப்போது ஏற்படுகிறதோ அப்போதெல்லாம் தனிமனிதனின் மனச்சாட்சி விழித்துக் கொள்ள வேண்டும். சட்டத்தையும் சுதந்திரத்தையும் தனிமனிதனின் மனச்சாட்சியையும் அரசாங்கத்துடன் ஒன்றுபடுத்தும் கலையே ஜனநாயகம்.

இதிலிருந்து ஒன்று விளங்கும். நாட்டுக்கு வேண்டியது ஜனநாயக அடிப்படையில் உள்ள சுய கட்டுப்பாடுதானேயன்றி அரசாங்கக் கட்டுப்பாட்டினால் அடக்கப்பட்ட ஜனநாயகம் அல்ல.

எதிர்க் கட்சிகள் வேண்டுவது ஜனநாயகத்துடன் கூடிய கட்டுப்பாடு. ஆளும் கட்சியினர் விரும்புவது ஜனநாயகம் அல்லாத கட்டுப்பாடு.

காங்கிரஸ் கட்சி மட்டுமே ஒருமைப்பட்ட ஸ்திரமான ஆட்சியை வழங்க முடியும் என்ற வாதத்தை நான் நிராகரிக்கிறேன். எத்தனையோ பல தேசங்களில் பல சந்தர்ப்பங்களில் கூட்டுச் சர்க்கார்கள் வெற்றிகரமாக இயங்கியுள்ளன. பாரதத்திலும் பல கட்சிகள் இணைந்து பொதுவான ஒரு மாற்றுத் திட்டத்தின் அடிப்படையில் நல்லாட்சி வழங்குவது சாத்தியமே.

நன்றி: தினமணி

# நேர்மையான தேர்தல் நடக்குமா?

**ஜே. ஏ. நாயக்**

ஏற்கெனவே அறிவித்தபடி நாடாளுமன்றத் தேர்தல் இரண்டே நாட்களில் நடந்து முடியாது. நாலு நாட்கள் நடக்கும். மார்ச் 16, 18, 19, 20 தேதிகளில் நடக்கும். எல்லா வோட்டுக்களையும் எண்ண ஆரம்பிப்பது 21ம் தேதி. மக்களுக்குத் தேர்தல் முடிவுகள் தெரிய வருவது 22ம் தேதி மாலை. பதினேழாம் தேதி ஏன் தேர்தல் நடக்காது என்பது பெரிய மர்மமாக இருக்கிறது. நாலு நாள் தேர்தல் நடப்பதற்கு அவசியம் என்ன? முன்னர் குறிப்பிட்டது போல் இரண்டே நாட்களில் ஏன் நடத்தி முடிக்கக் கூடாது?

16ம் தேதி போட்ட வாக்குகளையும் 21ம் தேதியே எண்ணுவதற்கு எடுத்துக்கொள்வார்கள். ஆக வோட்டுப் பெட்டிகள் அனைத்தும் ஐந்து நாட்களுக்கு அரசாங்க நிர்வாகிகளிடம் இருக்கும். 18ம் தேதி வோட்டுப் போட்டவர்களின் வாக்குச் சீட்டுக்கள் மூன்று நாட்களுக்கு அரசாங்க அதிகாரிகள் பொறுப்பில் இருக்கும்.

16, 18 தேதிகளில் தேர்தல் நடக்கும் மாநிலங்கள் எவை? கேரளா தவிர மற்ற எல்லா மாநிலங்களிலும் 16ம் தேதியே தேர்தல் நடக்கும். 16ந் தேதியன்றே தேர்தலில் பெரும் பகுதி நடந்து முடிந்து விடும். மறுநாள் 17ம் தேதி தேர்தல் அதிகாரிகளுக்கு விடுமுறை! என்ன காரணத்துக்கோ? அன்று ஞாயிற்றுக் கிழமை கூட இல்லை. உத்தரப் பிரதேசம், பீகார் மாநிலங்களில் 16ம் தேதி தவிர 18ம் தேதியும் தேர்தல் நடக்கும். இந்த மாநிலங்களில் மூன்று நாட்களுக்குக் குறையாமல் வாக்குப் பெட்டிகள் அதிகாரிகள் கையில் இருக்கும்.

எதிர்க்கட்சிகள் அந்தந்த வாக்குச் சாவடிகளிலேயே தேர்தல் முடிந்த கையோடு வோட்டுக்கள் எண்ணப்பட வேண்டும் என்று நீண்ட காலமாகக் கோரி வருகின்றன. இந்த நியாயமான கோரிக்கைக்குச் சிறிதும் மதிப்பளிக்காமல் தேர்தல் கமிஷன் இயங்குகிறது. இவ்வளவு குறுகிய காலகட்டத்தில் தேர்தல் விதிகளை மாற்ற முடியாது என்று அபத்தமான காரணத்தைக் கூறுகிறது.

வேட்பாளர்களின் ஏஜெண்டுகள் வோட்டுப் பெட்டிகளைச் சதா கண்காணிக்கலாமே என்று அதிகாரிகள் சொல்கின்றனர். ஆனால் இப்படி நாலு நாட்களுக்கும் ஐந்து நாட்களுக்கும் கண்காணிப்பது சாத்தியமா? ஏற்கெனவே பல தேர்தல்களில் அநுபவப்பட்ட ஏஜெண்டுகள், வினாடி நேரம் தப்பாமல் வோட்டுப் பெட்டிகளைக் கண்காணிப்பது சாத்தியமல்ல என்றுதான் கூறுகிறார்கள்.

வோட்டுப் பெட்டிகள் மோட்டார் வாகனத்தில் ஏற்றப்பட்டுச் செல்கின்றன. எல்லா

---

அலகாபாத் தீர்ப்பைப் பின்னால் சுப்ரீம் கோர்ட் மாற்றியமைத்தது உண்மையே. ஆனால் அந்தத் தீர்ப்பை மாற்றுவது சுப்ரீம் கோர்ட்டுக்கு எளிதாகுமாறு தேர்தல் சட்டங்களில் சில, அலகாபாத் தீர்ப்புக்குப் பிறகு மாற்றியமைக்கப்பட்டன என்பதையும் நினைவில் கொள்ள வேண்டும்.


நெருக்கடி நிலை பிரகடனம்
பக்ருதீன்


தேர்தல் பிரகடனத்திலும் கையெழுத்திட்ட நினைவு எனக்கு இருக்கிறது!
பக்ருதீன்


தேர்தல் அறிக்கை
தேர்தல் அறிக்கை 'காந்திய சோஷலிஸம்'
ஜனதா
காங்கிரஸ்


போனது போகுதுன்னு ஒரு இலையை உங்களுக்கு விட்டுக் கொடுத்திருக்கிறேன்!
கொடுக்கறதை கொடுக்கறீங்க பெரிய இலையை விட்டுக் கொடுத்திருக்கக் கூடாதா?
தோழரே!... இலை கிடக்கட்டும்!.. வேர் விடறது தான் முக்கியம்!
அ.இ.அ.தி.மு.க
இ. காங்கிரஸ்
கம்யூனிஸ்ட்

ஏஜெண்டுகளும் வாகனத்தில் ஏறி அமர முடியாது. வாகனம் நிரம்பி விட்டால் முன்னால் டிரைவருக்குப் பக்கத்தில்தான் அமரவேண்டும். போகும் வழியில் வோட்டுப் பெட்டிகளைக் கண்காணிப்பது சாத்தியமல்ல. போகும் வழியில் பல வோட்டுப் பெட்டிகளின் ஸீல்கள் உடைந்து போகின்றன. அதில் ஏஜெண்டு கையெழுத்துப் போட்டு இணைத்த காகிதம் துண்டு துண்டாகக் கிழிகிறது அல்லது கண்ணுக்குப் புலனாகாமல் மறைகிறது! இவை வாகனத்தின் ஆட்டத்தினால் — குலுங்கலினால் ஏற்பட்டனவா அல்லது ஸீல்கள் பாதுகாப்பு அறையில் நீக்கப்பட்டு வேறு வோட்டுப் பெட்டிகளில் பொருத்தப்பட்டனவா என்பதை அறிய வழியே இல்லை.

பாதுகாப்பு அறையில் பெட்டிகள் மாற முடியுமா? முடியும். அதற்குச் சாத்தியக் கூறுகள் உள்ளன. வோட்டுச் சாவடியிலிருந்து வோட்டுப் பெட்டிகளைக் கொண்டு வந்து வைப்பதற்கு முன் பாதுகாப்பு அறைகள், வேட்பாளர்கள் அல்லது ஏஜெண்டுகளின் பார்வையின் கீழ் இருப்பதில்லை. ஏற்கெனவே சில பெட்டிகள் அங்கு இருக்குமேயானால் அதைப் பற்றி அறிய வேட்பாளருக்கோ அல்லது அவரது ஏஜெண்டுக்கோ வழியில்லை. ஏற்கெனவே அங்கு இருந்தவையா அல்லது வேறு ஓட்டுச் சாவடிகளிலிருந்து அங்கு வந்தவையா என்பதை அவர்கள் திட்டவட்டமாக அறிய முடியாது. வான்—வாகனத்திலிருந்து வோட்டுப் பெட்டிகளை இறக்கிப் பாதுகாப்பு அறையில் வைக்கும்போது வேட்பாளர் ஏற்கெனவே சில வோட்டுப் பெட்டிகள் அங்கு இருப்பதைப் பார்க்கிறார். அவை வோட்டுச் சாவடிகளிலிருந்துதான் வந்தவை என்பதற்கு என்ன அத்தாட்சி அவருக்குக் கிடைக்கும்? சில உடைந்த ஸீல்களை—கிழிந்த கையெழுத்துச் சீட்டுக்களை அவற்றில் பொருத்திவிட முடியாதா?

சென்ற உத்தரப் பிரதேச சட்ட மன்றத் தேர்தலின்போது சில வோட்டுப் பெட்டிகளில் வோட்டுச் சீட்டுக்கள் கட்டுக் கட்டாய் இருந்தன என்ற செய்தியைச் சில பத்திரிகைகள் பிரசுரித்தன. இப்படி வோட்டுச் சீட்டுக்கள் கட்டுக் கட்டாக எப்படி வோட்டுப் பெட்டிக்குள் வர முடியும்? ஒவ்வொரு வாக்காளரும் தனித் தனியாகத்தானே வோட்டுச் சீட்டை மடித்துப் போடுகிறார்? வோட்டுப் பெட்டிகள் மாற்றப்படுகின்றன என்று எதிர்க் கட்சிகள் முன்பே பல முறை குற்றம் சாட்டவில்லையா? இந்தக் குற்றச்சாட்டுக்களையும் சந்தேகங்களையும் சுலபமாக ஒதுக்கி விடலாமா?

வரும் மார்ச் மாதத்திய தேர்தல், சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த மகத்தான ஒன்றாக விளங்குகிறது. இதில் பிரச்னைக்குரிய விஷயம் ஒரு தனி நபரின் எதிர்காலம் அல்லது ஒரு கட்சியுடைய எதிர்காலம் அல்ல. ஒரு ஜனநாயக அரசியல் அமைப்பின் தலைவிதியையே நிர்ணயிக்கப் போகிற தேர்தல் இது. சில எதிர்க் கட்சிகளுக்கு வோட்டுப் பெட்டிகள் மாற்றப்பட்டன அல்லது ஏதோ திரிசமத்துக்கு உள்ளாயின என்ற எண்ணம் ஏற்படுமேயானால் தேர்தலின் நேர்மையில் மக்களுக்கு நம்பிக்கை போய்விடும்.

இவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்த பிரச்னையில் தேர்தல் கமிஷன் விதிமுறைகளை இப்போது மாற்ற முடியாது என்ற அற்பக் காரணம் காட்டிக் கொண்டிருக்கக் கூடாது. வோட்டுச் சாவடிகளிலேயே வோட்டுக்களை எண்ண உத்தரவிட வேண்டும்.

ஒவ்வொரு வோட்டுச் சாவடியிலும் எத்தனை பேர் யார் யாருக்கு வோட்டுப் போட்டார்கள் என்ற ரகசியம் வெளியாகிப் பரவி அது மற்ற இடங்களில் பிறகு நடக்கும் தேர்தல்களைப் பாதிக்கும் என்று காரணம் சொல்வது பலவீனமான வாதம். இதைவிட, வோட்டுப் பெட்டிகளில் திரிசமம் ஏதும் நிகழாது என்று மக்கள் நம்பிக்கை பெறுவது முக்கியம்.

நன்றி: இந்தியன் எக்ஸ்பிரஸ்

அட்டைப்பட விளக்கம்

## குமாரி ஜெயந்தி

மேடையை அலங்கரித்தார் என்று உபசாரமாகச் சொல்வதுண்டு. இவ்விதம் மேடையில் காணப்படும் செல்வி ஜெயந்தி எந்த ஒரு மேடைக்கும் அலங்காரமாகத் திகழக் கூடியவர்தாம் என்பது பார்த்த விநாடியிலேயே புரிந்து போகும். அது சரி, பரத நாட்டியக் கலையில் எந்த அளவுக்குத் தேர்ச்சி பெற்றிருக்கிறார்? என்ற அடுத்த கேள்விக்கும் சுலபமாகவே பதில் கூறிவிடலாம்.

'பம்பாய் ஸ்ரீ ராஜ ராஜேசுவரி கலா மந்திர் மாணவி' என்றால் போதாதா?

அபிநய நவநீதம் என்ற நூலை எழுதிப் பரத கலைக்குப் பெரும் தொண்டாற்றிய பஞ்சாபகேச நட்டுவனாரின் புதல்வர் குப்பையா பிள்ளைதாம் பம்பாய் ராஜ ராஜேசுவரி கலா மந்திரின் முதல்வர். அவருக்குக் கீழ் கோவிந்தராஜ பிள்ளை, மகாலிங்கம் பிள்ளை, கல்யாணசுந்தரம் ஆகியோர் சிறப்புற இயங்கி, கலா மந்திரின் புகழைத் திக்கெட்டும் பரப்பும் மாணவ மணிகளை உருவாக்குகிறார்கள். இன்னும் சிறிது காலத்தில் ராஜ ராஜேசுவரி கலாமந்திர், பரத நாட்டியக் கலைக்காகத் தன்னை அர்ப்பணித்துக் கொள்ளும் ஒரு கல்லூரியாகவே உயரப் போகிறது.

இந்த உயர்ந்த லட்சியம் ஈடேற முதல் காணிக்கையாகத் தமது அரங்கேற்றத்தின் போது வசூலான தொகை முழுவதையும் அளித்தார் குமாரி ஜெயந்தி.

ஹைதராபாத் திரு ஏ. எம். லால் அவர்களின் புதல்வி குமாரி ஜெயந்தி பம்பாய் சோபியா கல்லூரியில் சரித்திரத்தில் பி.ஏ. பட்டம் பெற்றவர். சிறு வயதிலிருந்தே பல விதமான நாட்டிய வகைகளில் ஈடுபாடு கொண்டு வளர்ந்த இவர், பரத நாட்டியத்தை முறையாக ஐந்து ஆண்டுகள் ராஜ ராஜேசுவரி கலாமந்திரில் பயின்று தேறியவர்.

காலைத் தூக்கி நின்றாடும் தெய்வம், செல்வி ஜெயந்தியின் கலைத் திறன் மேன்மேலும் பிரகாசிக்கக் கைதூக்கி அருளட்டும்.

# “ஆழுகால் ஸ்தோத்திரம்”




ஜகத்குரு ஸ்ரீகாஞ்சிகாமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

“ஞானியையும் ஞானத்தைத் தேடுகிறவனையும் மட்டுமில்லாமல், லௌகிகமான கஷ்டம் தீருவதற்காகவே பிரார்த்தனை பண்ணுகிறவனையும், ஓரளவு சௌக்யமாயிருந்தும் கூட இன்னும் ஜாஸ்தி சௌக்கியம் வேண்டும் என்று பிரார்த்திக்கிறவனையும் கூட ஏன் பகவான் தன் பக்தர்கள் என்று சொல்லிக் கொண்டார்? ஏன் அவர்களை 'ஸுக்ருத்', 'உதாரர்கள்' என்றெல்லாம் ஸ்லாகித்தார்?” என்பது கேள்வி.

லோக வாழ்க்கையில் நமக்கு அநேக கஷ்டங்கள் வந்து கொண்டே இருக்கின்றன. இத்தனை கஷ்டங்களையும் கொஞ்சம் கூடப் பொருட்படுத்தாமல், 'பகவான் விட்ட வழி' என்று நாம் பகவானை பகவானுக்காகவே பக்தி பண்ணிக் கொண்டிருந்து விட்டால் ரொம்ப உசத்திதான். இதற்கு ஆட்சேபணையே இல்லை. ஆனால், நடைமுறையில், வாஸ்தவத்தில் நம்மில் யாரால் அப்படி இருக்க முடிகிறது? ஏதோ ஒரு மாயை லோகம் முழுவதையும் பிடித்து ஆட்டுகிறது. 'மஹா மாயா விச்வம் ப்ரமயஸி' என்று ஆசார்யாள் கூடச் சொன்னார். அதிலேதான் நாம் மாட்டிக் கொண்டிருக்கிறோம். லோகம் தான் நிஜம்; நம் தேகம்தான் நிஜம் என்றே நாம் அத்தனை பேரும் நினைத்துக் கொண்டிருக்கிறோம். லோக வாழ்க்கை நடத்திக் கொண்டிருக்கிறோம். இதிலே ஒரு தோல்வி, மானபங்கம், வியாதி, வக்கை, கடன், கஸ்தி வந்தால் கஷ்டப்படத்தான் செய்கிறோம். இப்படிக் கஷ்டப்படா விட்டால் உசத்திதான். சந்தேகமேயில்லை. இன்றைக்கு இல்லாவிட்டாலும் என்றைக்கோ ஒரு நாளாவது நாம் இம்மாதிரி கஷ்டப்படாமல், மாயையை மாயை என்று தெரிந்துகொண்டு, பட்டுக் கொள்ளாமல் இருக்க வேண்டும். இப்போதிலிருந்தே அதற்கான பிரயத்தனங்களைப் பண்ணிக் கொண்டே இருக்க வேண்டும். ஆனால் என்றைக்கோ அப்படி நாம் ஆவதும் ஆகாததும் ஒரு பக்கம் இருக்கட்டும். இன்றைக்கு, இப்போது நமக்குக் கஷ்டம் வந்தால் அது கஷ்டமாகத் தெரிகிறதா, இல்லையா? முள் குத்தினால் கால் வலிக்கிறதோ இல்லையோ? ஜுரம் வந்தால் “ஹா ஹா” என்று அனத்துகிறோமோ இல்லையோ? வீட்டிலே ஒரு கஷ்டம், ஆபீஸில் சண்டை, ஏதோ ஓர் அவமானம் என்றால் உள்ளே அது நம்மைக் கருணைக் கிழங்கு மாதிரி அரித்துப் பிடுங்கிக் கொண்டே இருக்கிறதா, இல்லையா? நம் வீட்டுக்காரர்களுக்கு நாம் செய்ய வேண்டியதைச் செய்ய வேண்டும், பெண்ணுக்குக் கல்யாணம் பண்ண வேண்டும், பிள்ளைக்குக் காலேஜில் ஸீட் பிடிக்க வேண்டும் என்று இப்படி நம் கடமைக்காக, பொறுப்புக்காக அலைய வேண்டியிருக்கிறதோ இல்லையோ? இதில், போகிற இடங்களில் காரியம் ஜயிக்காமல் ஏமாந்து போகிறோமல்லவா? இந்த மாதிரி சமயங்களில் என்ன பண்ணுவது? எல்லாம் கர்மா என்று மனசைத் தேற்றிக்கொண்டு, கீதையில் சொன்ன மாதிரி, நம் கடமையை மட்டும் பண்ணிக் கொண்டு, பலனை நினைக்காமல் லேசாக இருந்துவிடலாம் என்றால், அது முடியாமல், உள்ளே அரித்துப் பிடுங்கிக் கொண்டே இருக்கிறதே. இப்போது என்ன பண்ணலாம்? பகவான் என்று ஒருத்தன் இருக்கிறான், அவன்தான் ஸர்வ லோகங்களையும் நிர்வாகம் பண்ணுகிறான், தர்மம் என்கிற சட்டத்தை (law) வைத்துக் கொண்டு அதன்படி அவன் ஆட்சி பண்ணுகிறான் என்று நாம் நம்புகிறோம். தர்ம 'லா' படிதான் அவன் 'ரூல்' பண்ணுகிறான் என்றாலும், அவன் பரம கருணாநிதி, எத்தனை அபராதங்கள் பண்ணினாலும் க்ஷமிக்கிற அருள் வள்ளல், க்ருபா சமுத்திரம் என்றும் மகான்கள் எல்லாரும் பாடி வைத்து விட்டுப் போயிருக்கிறார்களே! அதனால் லோக வாழ்க்கையில் மாட்டிக் கொண்டிருக்கிற நாம் — அவன்தானே இப்படி நம் மேலே மாயையைப் போர்த்தி மாட்டி வைத்திருக்கிறான்? — அவனிடமே இந்த லோகத்துக் கஷ்டங்கள் தீருவதற்குப் பிரார்த்தனை பண்ணுவதில் என்ன தப்பு? இப்படி ஓர் அபிப்பிராயம்.

எது வேண்டுமானாலும் எப்படி வேண்டுமானாலும் போகட்டும் என்று தாமரை இலைத் தண்ணீர் மாதிரி இருக்கிறவர்கள் (அல்லது அந்த மாதிரி என்றைக்காவதேனும் நாமும் ஆகவேண்டும் என்று தாபப் படுகிறவர்கள் கூட) லோகத்தில் அபூர்வமாகத்தான் இருப்பார்கள். இந்த உலக வாழ்க்கையின் கஷ்ட நஷ்டங்களைப் பொருட்படுத்துகிறவர்கள், அது தீர வேண்டும் என்று தவிக்கிறவர்கள் தான் நூற்றுக்குத் தொண்ணூறு பேர் இருப்பார்கள். இவர்களுடைய கஷ்டத்தைத் தீர்த்து வைக்க பகவானுக்கு சக்தியும் உண்டு, உரிமையும் உண்டு. அதற்கான கரு

[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது]

# உலக ஹிந்துப் பேரவை–மதுரை மகாநாடு



பாதைகள் அனைத்தும் ரோமுக்கே செல்கின்றன என்ற பழமொழிக்கு உருவம் கொடுத்தது போல் அமைந்திருக்கிறது மதுரை மாநகரம். ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேசுவரரின் ஆலயத்தை மையப் புள்ளியாகக் கொண்டு அமைந்திருக்கும் இந்த நகரத்தில் மனிதன் பாதையைத் தவற விட்டாலும், கோவிலைக் குறிப்பாகக் கொண்டு சரியான இடத்தை அடைந்து விட முடியும்.

உலகத்து மதங்கள் பதின்மூன்று என்று ஒரு கணக்கு. அத்தனை மதங்களும் நாடுவது ஒரே பொருளை. அதுவே பரம்பொருள். அதற்கு மேலான பொருள் ஒன்று கிடையாது. எனவே தான் நம் தமிழ் நாடு 'எம்மதமும் சம்மதம்' என்ற கொள்கையைப் பின்பற்றி இணையற்று விளங்குகிறது.

உருவமில்லாப் பரம்பொருள் உருவமெடுத்துப் பல திருவிளையாடல்கள் புரிந்துள்ள மதுரை மாநகரிலே, உலகில் உள்ள மதங்கள் அனைத்தையும் அழைத்து, வேற்றுமையிலும் ஒற்றுமையைக் காண வேண்டும், காட்ட வேண்டும் என்று ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் பெருநோக்கம் கொண்டுள்ளார்கள். சென்னையில் நடைபெற்றது உலக ஹிந்துப் பேரவை. மதுரையில் நடக்கவிருப்பதோ உலக மதங்களையே தன்னுள் அடக்கித் தத்துவார்த்தம் செய்து நிறைவு காணப் போகும் கலாசாரப் பேரவை.

மார்ச் 5ந் தேதியிலிருந்து 10-ந் தேதி வரை ஸ்ரீ சுவாமிகள் முன்னிலையில் நிகழவிருக்கும் இந்தப் பெருவிழாவில் கலைக் காட்சியும் இடம்பெறுகிறது. இதில் பங்கு பற்றி நலம் பெற விரும்புவோர் நாட வேண்டிய முகவரி: உலக ஹிந்துப் பேரவை, கிளை அலுவலகம், 13, சிவஞானம் சாலை, தியாகராய நகர், சென்னை-600017.

---

னையும் அவனுக்கு நிச்சயம் உண்டு. அதனால் அவனிடம் கஷ்டத்தைத் தீர்க்கச் சொல்லிப் பிரார்த்தனை பண்ணுவது ரொம்பச் சரிதான் என்று அபிப்ராயப்படுகிறவர்கள் உண்டு. ''பகவான் உனக்கு ஒரு சரீரத்தைத் தந்திருக்கிறான், குடும்பத்தைத் தந்திருக்கிறான். இவற்றை நன்றாகப் பார்த்துக் கொள்ளவேண்டிய பொறுப்பு உனக்கு இருக்கிறது; கடமை இருக்கிறது. இதற்காக டாக்டர், மேல் அதிகாரி, கடன் கொடுக்கிறவன், அவன் இவன் என்று யார் யாரிடமோ போய் நிற்கிறாயா இல்லையா? எல்லாருக்கும் மேலே இருக்கிற பகவானிடம் மட்டும் போய் நின்றால் என்ன தப்பு? வெட்கப்பட அதில் என்ன இருக்கிறது? மனுஷ்ய ரூபத்தில் உனக்கு உதவி செய்கிறவர்கள் (*human agency*) கூட உனக்குச் சாதகமாக இருக்க வேண்டும் என்றால், இதைச் சாதித்துத் தரக் கூடியவன் பகவான்தானே? அதனால் மற்றவன் காலில் விழுகிறதற்கு முன்னாடி அவன் காலில் விழு. ஒருத்தன் காலிலும் விழாமலிருக்கிற பக்குவம் உனக்கு வந்தால் அப்போது இந்த லௌகிக கஷ்ட நிவிருத்திக்காக நீ பகவான் காலிலும் விழாமல் இருக்கலாம்'' என்று சொல்வார்கள்.

நம்மால் எதையும் சாதித்துக் கொள்ள முடியாது; ஈசுவர சக்திதான் எல்லாவற்றுக்கும் மேல் பெரிதானது என்று நம்பித் தானே ஓர் ''ஆர்த்தன்'' (அதாவது கஷ்டப்படுகிறவன்) பகவானைப் பிரார்த்திக்கிறான்? இது நல்ல மனோபாவம்தானே? இதனால்தான் இப்படிப்பட்ட மனோபாவம் படைத்தவனையும் பகவான், 'ஸுக்ருதின:', 'உதாரா:' என்று சிலாகித்துச் சொல்லியிருக்கிறார்.

எதற்கும் 'நான்', 'நான்' என்று மாரைத் தட்டிக் கொண்டிருக்கிற மனுஷ்யன், ஏதோ ஓர் இடத்தில், தான் அதன் கிருபை இல்லாமல் எதுவும் செய்ய முடியாது என்று நம்பி, அடங்கி, பணிந்து, வேண்டிக் கொள்கிறான் என்றால் அது அந்த அளவுக்கு உயர்ந்தது தான். லௌகிகமான தேவையின் பூர்த்திக்காகத்தான் இருக்கட்டும், அல்லது வேறு எந்தக் காரணத்துக்காக வேண்டுமானாலும் இருக்கட்டும், நம் எல்லாரையும் விட பகவான் பெரியவன் என்ற நம்பிக்கையோடு பிரார்த்தனை பண்ணுவது சரியானதுதான் என்றே சொல்ல வேண்டும். 'இந்த வாழ்க்கையிலேயே தர்மத்துக்கு விரோதமாக இல்லாத வரையில் ஜனங்களின் நியாயமான ஆசைகளாகக் கூட நானே இருக்கிறேன்' என்று பகவானே கீதையில் ஓர் இடத்தில் சொல்லியிருக்கிறான். **தர்மாவிருத்தோ பூதேஷு காமோஸ்மி பரதர்ஷப.** அதர்மமாக ஆசைப்படக் கூடாது; துராசை கூடாது. தர்மமான ஆசைகள் இருந்தால் அதை பகவானும் அந்த ஸ்டேஜில் ஒத்துக் கொள்வார்.

'சரி, அப்படியானால் போதுமான அளவுக்கு (சௌக்கியம்) இருந்தும் கூட, அதற்கு மேல் வேண்டும் என்று பிரார்த்தித்துக்கொள்கிற 'ஆர்த்தார்த்தி'யின் சமாசாரம் என்ன? அவனை எப்படிப் பக்தர்களோடு சேர்க்கலாம்?' என்ற கேள்வி எழும்புகிறது.

(தொடரும்)



# ராஜாஜி – வாழ்க்கை வரலாறு

ராஜ்மோகன் காந்தி

## கல்கி

• மார்ச்சு 6உ இதழில் ஆரம்பம் •

# தம்மின் தம்மக்கள்







உலகமெல்லாம் பெரும் புகழும் பெற்ற டென்னிஸ் கிருஷ்ணன் சமீபத்தில் தமது குமாரனிடம் டென்னிஸ் போட்டியில்தோற்ற தாகச் செய்தி வந்தது. பார்க்கப் போனால் இதுவும் கிருஷ்ணனுக்கு ஒரு வெற்றியேதான். தம்மில் தம் மக்கள் சிறப்புடையவர்களாய் இருப்பதில் தந்தைக்குத் தானே பெருமை! இதில் இன்னொரு விஷயம், இதே கிருஷ்ணன் சிறு வயதில், சென்னையின் முதல் டென்னிஸ் சாம்பியனாக இருந்த தமது தந்தை ராமனுதனை வெற்றி கொண்டிருக்கிறார். ஆகவே ஒரு குடும்பம் மூன்று தலைமுறைகளாக விடாமல் தொடர்ந்து பெருமை பெற்று வருவது பாராட்டுக்குரியதாகும்.

இத்தகைய பரம்பரைப் பெருமை வெற்றிகரமாக அமைவது மிகவும் குறைவு. பெரும் புகழும் பெற்று விளங்கிய பல பெரியோர்களின் வாரிசுகள், தங்கள் மூதாதையர்களை விடப் பெருமை பெறுவிட்டாலும் அவர்களது பெருமைகளைக் காப்பாற்றும் அளவுக்குக்கூட விளங்காமல் இருக்கிறார்கள்.

'ஞான பண்டிதன்' என்றும் 'தகப்பன் சாமி' என்றும் 'குருநாதன்' என்றும் பலவாறு புராணங்களில் வர்ணனைக்குள்ளாகும் முருகன், தந்தைக்கே உபதேசம் செய்யும் பெருமை பெற்றவர். இந்த வகையில்பெருமை கொண்ட பாரம்பரியங்களும் நமது தமிழ் நாட்டில் சில இல்லாமல் இல்லை.

சென்னை உயர்நீதி மன்றத்தின் தலைமை நீதிபதியாக விளங்கி தற்போது ஓய்வு பெற்றிருக்கும் ஜஸ்டிஸ் ராஜமன்னார் அவர்களின் தந்தையும் உயர்நீதிமன்ற தலைமை நீதிபதியாக இருந்தவர். அது மட்டுமல்ல ஒரே காலத்தில் மைசூர் ராஜ்யத்தின் தலைமை நீதிபதியாக அவரது தந்தையும், சென்னை தலைமை நீதிபதியாக ராஜமன்னாரும் பதவி வகித்தது குறிப்பிடத் தக்க ஒன்றாகும்.

இன்று, பெரும் புகழும் மரியாதையும் பெற்று, ஏராளமான அன்பர்களையும்பெற்று, கதாகாலட்சேபக் கலையில் சிறந்து விளங்கும் கிருபானந்த வாரியார் அவர்களின் தந்தையும் பாரத கதாகாலட்சேபம் செய்யும் பெரும் அறிஞராக புகழ்பெற்று விளங்கினார். அவருக்குப் பின் அவரது புதல்வர் வாரியார் அவரை விடவும் மிக மேலான வகையில் இன்று விளங்குவதைக் காண்கிறோம். இது அவரது தந்தையின் பாக்கியம்.

பண்டித ஜவஹர்லால் நேருவின் தந்தையான மோதிலால் நேரு பெருமைகள் பல பெற்றவர். மோதிலால் நேருவையும், ஜவஹர்லால் நேருவை போல பெருமை கொண்ட ஒரு தந்தையையும், மகனையும் உலகில் காண்பது மிக அரிதாகும். மோதிலால் நேரு பெரும் புகழ் பெற்றவர் என்றால் ஜவஹர்லால் நேரு அவரை விடப் புகழ் பெற்றவர். மோதிலால் நேருவும் பாரிஸ்டர், நேருஜியும் பாரிஸ்டர். மோதிலால் நேரு அகில இந்தியக் காங்கிரஸ் தலைவராக இருந்தவர். அதைப் போல நேருஜியும் பலதடவை தலைவராக இருந்தவர். ஐம்பது வருடங்களுக்கு முன் ''இந்தியாவின் லட்சியம் பரிபூரண சுதந்திரம்'' என்ற தீர்மானத்தை நிறைவேற்றிய லாகூர் காங்கிரஸ் மாநாட்டில் தலைமைப் பதவியை, பண்டித ஜவஹர்லால் நேரு ஏற்கனவே காங்கிரஸ் தலைவராக இருந்த மோதிலால்ஜியிட

மிருந்து வாரிக முறையில் பெற்றார். அன்றி விருந்து தந்தைக்கு புகழ் சேர்க்கும் வகையில் நேருஜி வளர்ந்தார்.

தென்னாட்டில் மிகச் சிறந்து விளங்கும் தொழில் ஸ்தாபனங்களில் ஒன்று டி. வி. எஸ். ஆகும். இப்பொழுது இருக்கக்கூடிய நிர்வாகிகளின் தந்தையார் டி. வி. சுந்தரம் அய்யங்கார் மிகச் சாதாரணமான நிலையில் இருந்தவர். மோட்டார் தொழிலில் புகுந்து விடா முயற்சியுடன் அந்த ஸ்தாபனத்தை ஓர் ஆலமரம் போல வளர்த்தார். நேர்மை, திறமை, காலம் தவறாமை போன்ற உயர்ந்த லட்சியங்கள் அந்த ஸ்தாபனத்திற்கே சொந்தமானவை. அவர் அறுபது வயது அடைந்த போது, பெரிய அளவில் ஒரு தலைமை நிலையத்தைக் கட்டி, தமது மணி விழாவையும் கொண்டாடி, ஸ்தாபனத்தின் பொறுப்புக்களை முற்றிலும் தமது குமாரர்களிடம் தந்து விட்டு, ஓய்வு பெறுவது என்ற நல்ல முடிவுக்கு வந்தார். இதற்காக அப்பொழுது சென்னை இராஜ்யத்தின் முதல்வராக இருந்த ராஜாஜி தலைமையில் தலைவர் காமராஜர் பங்கு கொள்ளும் வகையில் விழாவிற்கு ஏற்பாடு செய்திருந்தார்.

தலைவர் காமராஜர் பேசும் பொழுது சுந்தரம் அய்யங்காரையும் அந்த ஸ்தாபனத்தின் பெருமைகளையும் அவர் குமாரர்களின் திறமைகளையும் குறிப்பிட்டு விட்டு ''முதியவர்கள் இளையவர்களிடம் பொறுப்புக்களை தந்து விலகுவது ஒரு பாராட்டத்தக்க விஷயமாகும். இது தொழிற் துறையில் மட்டுமல்ல, அரசியல் மற்ற துறைகளிலும் முதியவர்கள் மேற்கொள்ள வேண்டிய ஒரு விஷயமாகும்'' என்று குறிப்பிட்டார். இப்படிக் குறிப்பிட்டது ராஜாஜிக்கு சற்று மன உறுத்தலாக இருந்திருக்க வேண்டும். அவர் தமது உரையில், ''முதியவர்கள் இளையவர்களுக்கு பொறுப்புக்களை தர வேண்டும் என்பதை நானும் வரவேற்கிறேன். ஆனால் டி. வி. சுந்தரமய்யங்காருக்கு தம்மைப் போலஅல்லது தம்மைவிடச் சிறப்பாக ஸ்தாபனத்தை வளர்த்து பெருமை சேர்ப்பவர்கள் தமது பிள்ளைகள் என்ற நம்பிக்கை பரிபூரணமாக ஏற்பட்டதன் பேரில் இந்த பொறுப்பு அளிக்கும் நிகழ்ச்சியைத் துணிந்து செய்கிறார்.. அவரது தீர்மானம் நியாயமானதுதான். அதேபோல அனுபவ அறிவும், ஆற்றலும் நேர்மையும் உள்ள பொறுப்புள்ள இளம் தலைமுறையினர் அரசியலில் இருந்தால் அவர்களிடம் பொறுப்பைத் தருவதில் எனக்கு எந்தவித ஆட்சேபணையும் இடையாது'' என்று குறிப்பிட்டார். ராஜாஜி சொன்னது போலவே சுந்தரமய்யங்காருக்குப் பின் அவரது புதல்வர்கள் ஸ்தாபனத்தை ஒரு மாபெரும் தொழில் வர்த்தக சாம்ராஜ்யமாக வளர்த்து வருவதை பார்க்கிறோம்.

''இவன் தந்தை என்ன தவம் செய்தானோ என்னும் வகையில் மக்கள் நடந்து கொள்ள வேண்டும்'' என்ற வள்ளுவர் வாக்கை நினைவு கூர்கிறோம்.

### மௌனியிடம் கற்றதா?

பெங்களூரில் உள்ள ஒரு 'பெட்ரோல் பங்க்' கில் ஒரு போலி மீட்டர் இருக்கிறது. அதில் குறைந்த அளவு பெட்ரோல் போட்டால் கூட மீட்டரில் அதிக அளவு காட்டும். எப்போதாவது ஒருவர் அதைப் பார்த்துவிட்டு முதலாளியிடம் கேட்டால் அவர் உடனே பெட்ரோல் போடும் பையனிடம் ஓடிப் போய், ''ஏன் இந்த மீட்டரில் போடுகிறாய்?'' என்று அவனைத் திட்டி ஒரு அறையும் கொடுப்பார். பிற்பாடு ஒரு அறைக்கு பத்து ரூபாய் விதம் அந்தப் பையனுக்கு கொடுத்து விடுவார்! (மௌனி நாடகத்தில் வரும் காட்சி போல் இல்லையா?)

'டெக்கான் ஹெரால்ட்' - ராகமாலிகா





- டென்னிஸ் கிருஷ்ணன்
- நேருஜி
- மோதிலால்ஜி
- திருமுருக கிருபானந்தவாரியார்
- திரு ராஜமன்னார்.
- டி. வி. எஸ். தலைமைக் காரியாலத்தில் உள்ள டி. வி. சுந்தரமய்யங்கார் சிலை.

பரந்தாமன்

# பார்த்திபன் கனவு

## அமரர் கல்கி

### அத்தியாயம் 5

### ஒற்றர் தலைவன்

நல்ல சமயத்தில் வந்து தன்னைக் காப்பாற்றிய குதிரை வீரனிடம் விக்கிரமனுக்கு நன்றி உணர்ச்சி உண்டாயிற்று. அவ்வீரனுடைய கேள்விக்கு மறுமொழியாக ''ஐயா! நான் வியாபாரி. உறையூருக்குப் போவதற்காக இந்தக் குறுக்கு வழியில் வந்தேன். வந்த இடத்தில் இந்த ஆபத்து நேர்ந்தது. நல்ல சமயத்தில் நீங்கள் வந்து உதவி செய்தீர்கள்'' என்றான்.

''வியாபாரியா நீர்? துலாக்கோல் பிடிக்கும் கையா இவ்வளவு லாகவமாய்க் கத்தி சுழற்றுகிறது? நம்ப முடியவில்லை, ஐயா! என்ன வியாபாரம் செய்கிறீரோ?''

''இரத்தின வியாபாரி நான். கத்தியை உபயோகிக்கவும் பழகியிருக்கிறேன்...''

'' அழகுதான் ! இரத்தின வியாபாரியா இம்மாதிரி காட்டு வழியில் தனியாகக் கிளம்பினீர்? அதுவும் இரா வேளையில்...''

''நரசிம்ம சக்கரவர்த்தியின் புகழைக் கேட்டு ஏமாந்து போனேன். அவருடைய ஆட்சியில் திருட்டுப் புரட்டே கிடையாது என்று கடல்களுக்கு அப்பால் உள்ள தேசங்களில் எல்லாம் ஜனங்கள் பேசிக் கொள்வதைக் கேட்டிருக்கிறேன்.''

''ஓகோ! வெளி நாட்டிலிருந்து வந்தீரா! நினைத்தேன் அப்போதே. எந்த நாட்டிலிருந்து வருகிறீர், ஐயா?''

''எனக்குச் செண்பகத் தீவு.''

''செண்பகத் தீவா? நானும் கேள்விப்பட்டிருக்கிறேன். அந்த நாட்டில் இரத்தினங்கள் அதிகம் உண்டு என்று. நல்லது; இரத்தின வியாபாரம் செய்யவந்த நீர் முதலில் காஞ்சிக்கல்லவா போக வேண்டும்? இவ்வளவு அவசரமாக உறையூருக்குக் கிளம்பியது ஏனோ?''

''சொல்லுகிறேன், ஐயா! ஆனால், தாங்கள் யார் என்பதைத் தெரியப்படுத்தவில்லையே!''

''நான் யாராக இருந்தால் என்ன?''

''என் உயிரைக் காப்பாற்றியவர் யார் என்று நான் தெரிந்து கொள்ள வேண்டாமா?''

''உம்முடைய உயிரை நான் காப்பாற்றவில்லை; நீரேதான் காப்பாற்றிக் கொண்டீர். மூன்று பேரை வேலை தீர்த்த உமக்கு இன்னும் ஒருவனைத் தீர்ப்பது பிரமாதம் ஒன்றும் இல்லை. ஆனாலும் நான் யாரென்று சொல்லுகிறேன். காஞ்சிச் சக்கரவர்த்தியைப் பற்றி நீர் கேள்விப்பட்டது பொய்யாகப் போயிற்று என்றீரே? அந்தச் சக்கரவர்த்தியின் ஊழியர்களில் ஒருவன் நான். ஒற்றர் படைத் தலைவன். நீர் தனியாக இந்தக் காட்டு வழியே போகிறீர் என்று எனக்குத் தகவல் வந்தது, ஏதாவது அபாயம் நேரலாம் என்று எதிர்பார்த்து உடனே புறப்பட்டு வந்தேன்...''

''அப்படியா? என்ன விந்தை? சக்கரவர்த்தியின் ஒற்றர் படை அவ்வளவு திறமையாகவா வேலை செய்கிறது? அப்படியானால் நான் எண்ணியது தவறு.''

''செண்பகத் தீவில் நடக்கும் ஆட்சியைப் போல் அவ்வளவு திறமையாக இங்கே அரசாங்கம் நடக்காமலிருக்கலாம், ஐயா! ஆனாலும் எங்களால் முடிந்தவரையில் கொலை, களவு நடக்காமல் பார்த்துக் கொண்டு வருகிறோம். பார்க்கப் போனால், இரவில் தனிவழியே வந்து நாலு உயிர்களின் மரணத்துக்குக் காரணமாயிருந்ததின் பொருட்டு உம்மை நான் பிடித்துக் கொண்டு போய்ச் சக்கரவர்த்தியின் முன்னால் நிறுத்த வேண்டும்.''

விக்கிரமனுடைய கை அப்போது அவனுடைய வாளை இறுகப் பிடித்ததை நட்சத்திரங்களின் மங்கிய ஒளியில் அவ்வீரன் கவனித்தான்.

''வேண்டாம் ஐயா, வேண்டாம். அவ்விதம் செய்கிற உத்தேசம் எனக்கு இல்லை. அயல் தேசத்திலிருந்து வந்தவ

ரானதால், இந்த வழியின் அபாயம் தெரியாமல் வந்துவிட்டீர். உம்மைப் போல் வேண்டுமென்று விபத்தில் அகப்பட்டுக் கொள்கிறவர்கள் இல்லாமற் போனால், அப்புறம் எங்களுக்குத்தான் என்ன வேலை இருக்கும்? ஒற்றர் படைத் தலைவன்தான் எதற்காக? நல்லது; நான் வந்த வேலை ஆகிவிட்டது. பார்க்கப்போனால், நான் வந்திருக்க வேண்டியதில்லை. யாருடைய உதவியும் இல்லாமல் உம்மை நீரே காப்பாற்றிக் கொள்ளக் கூடியவரா யிருக்கிறீர். நான் போய்வருகிறேன்'' என்றான் அவ்வீரன்.

விக்கிரமனுடைய உள்ளம் குழம்பிற்று. அவ்வீரனுக்குத் தான் தகுந்தபடி நன்றி செலுத்தவில்லை யென்று அவன் கருதினான். அன்றியும், அவ்வீரனுடன் இன்னும் கொஞ்சம் சிநேகம் செய்து கொண்டு உறையூர் போவதற்கு அவனுடைய குதிரையை வாங்கிக் கொள்ளலாம் என்ற ஆசையும் உண்டாயிற்று. இரவை எங்கே, எப்படிக் கழிப்பது என்ற கவலையும் தோன்றியது.



''அப்படியன்று. அந்தச் சமயத்தில் தாங்கள் வந்திரா விட்டால், ஒருவேளை நான் உயிரிழந்திருப்பேன். எனக்கு உயிர் அளித்தவர் தாங்கள்தான். அதோடு இன்னொரு உதவியும் தாங்கள் எனக்குச் செய்ய வேண்டும்'' என்றான் விக்கிரமன்.

''என்னிடம் யாராவது உதவி கேட்டால், அதை மறுக்கும் வழக்கம் கிடையாது. உதவி கேட்காதவர்களுக்குக் கொடுப்பதும் இல்லை.''

''உறையூருக்கு நான் அவசரமாகப் போக வேண்டி யிருக்கிறது, அதற்கு நீங்கள்தான் உதவி செய்ய வேண்டும். உங்கள்...''

''நீர் கேட்கப் போவது தெரிகிறது. என் குதிரையைக் கேட்கிறீர். ஆனால் இந்த இராத்திரியில் இனிமேல் இக் காட்டு வழியில் போனால், உம்முடன் குதிரையும் துஷ்ட மிருகங்களுக்கு இரையாக வேண்டியதுதான். உம்மைப்பற்றி எனக்குக் கவலையில்லை. ஆனால் என் குதிரையைப் புலிக்கு ஆகாரமாக்க எனக்கு இஷ்டமில்லை.''

''வேறு என்ன யோசனை சொல்லுகிறீர்கள்?''

''இங்கிருந்து கொஞ்ச தூரத்தில் ஒரு சிற்பியின் வீடு இருக்கிறது. என்னுடன் வந்தால், அங்கே படுத்திருந்து விட்டு அதிகாலையில் எழுந்து போகலாம்.''

விக்கிரமன் சற்று யோசித்து, ''அப்படியே செய்யலாம்'' என்றான்.

கீழே கிடந்த மூட்டைகளை எடுத்துக் குதிரை மேல் வைத்துக் கட்டினார்கள். பிறகு வீரன் குதிரையைப் பிடித்துக் கொண்டு காட்டுக்குள் புகுந்து செல்ல, விக்கிரமனும் அவன் பின்னால் சென்றான்.

## அத்தியாயம் 6

# சிற்பியின் வீடு



அடர்ந்த காட்டின் வழியே ஒரு கொடி வழி சென்றது. பட்டப் பகலிலேயே அந்த வழியில் இருள் சூழ்ந்திருக்கும்; நடுநிசியில் கேட்கவேண்டியதில்லை. பெரிய பாதையில் ஆங்காங்கு எட்டிப் பார்த்த நட்சத்திர வெளிச்சம் கூட அந்தக் கொடி வழியில் கிடையாது.

அப்படிப்பட்ட இருளில், முன் பின் தெரியாத ஒருவனைப் பின்தொடர்ந்து காட்டுக் கொடி வழியில் செல்லும்

போது விக்கிரமனுடைய தீர நெஞ்சம் கூட 'திக்திக்' என்று அடித்துக் கொண்டது. வழியோ மிகவும் குறுகலானது. இரு புறத்திலும் தழைத்திருந்த மரக் கிளைகளும் செடிகளும் கொடிகளும் அடிக்கடி விக்கிரமன் மேல் உராய்ந்தன.

வெகு சமீபத்திலிருந்து ஆந்தைகளும் கோட்டான்களும் கர்ண கடூரமான குரலில் சப்தமிட்டன.

எங்கேயோ வெகு தூரத்திலிருந்து ஒரு உறுமல் சத்தம் வந்தது. அதைக் கேட்ட குதிரை கனைத்தது. ஒற்றர் தலைவன் அப்போது குதிரையைத் தட்டிக் கொடுத்தான். அது, ''நான் இருக்கிறேன், பயப்படாதே!'' என்று சொல்வது போலிருந்தது.

முதலில் குதிரையும், பிறகு ஒற்றர் தலைவனும், பின்னால் விக்கிரமனுமாகப் போய்க் கொண்டிருந்தார்கள்.



ஓரிடத்தில் ஒரு மரத்தின் வேரில் கால் தடுக்கி விக்கிரமன் கீழே விழுந்தான். ஒற்றர் தலைவன் அவனுடைய கையைப் பிடித்துத் தூக்கி விட்டான். அப்போது விக்கிரமனுக்கு உண்டான வியப்புக்கு அளவேயில்லை. ''ஆகா! இது எத்தகைய இரும்புக் கை! இந்தக் கையில்தான் எவ்வளவு வலிவு! இந்த ஒற்றர் தலைவன் சாதாரண மனுஷன் இல்லை. மகா வீரனாயிருக்க வேண்டும்.



ஜெர்மானியக் கவிஞர் ஹைனி தாம் இறந்த பிறகு மக்கள் தம்மை எப்படிப் போற்றுவார்கள் என்பது பற்றிப் பேச வந்தபோது சொன்னார்: ''என் சமாதி மீது மலர் வளையம் வைத்தால் போதாது; ஒரு பட்டாக் கத்தியையும் வைக்க வேண்டும்.''

இலக்கியம் என்பது மலர்ந்து மணம் பரப்பும் விஷயம் மட்டும் அல்ல; போராடுவதற்குரிய ஓர் ஆயுதமும் கூட என்பது அவர் கருத்து. - பப்ளிக் அஃபேர்ஸ்

சக்கரவர்த்தி ஒவ்வொரு வேலைக்கும் சரியான ஆளைத்தான் தேர்ந்தெடுத்திருக்கிறார்'' என்று எண்ணினான்.

இன்னும் எவ்வளவு தூரம் இந்தக் கொடி வழியாகப் போக வேண்டுமோ என்று விக்கிரமன் எண்ணிய சமயத்தில் சட்டென்று இருள் சிறிது அகன்று வானம் தெரிந்தது. எதிரில் ஒரு கட்டடம் இருப்பது லேசாகப் புலப்பட்டது.

''நான் சொன்ன இடத்துக்கு வந்து விட்டோம். இந்த வீட்டில் இரவைக் கழிக்கலாம். பொழுது விடிந்ததும் நீர் கிளம்பலாம்'' என்றான் ஒற்றர் தலைவன்.

''ஆகட்டும்; ஆனால் இது யாருடைய வீடு! இப்படிப்பட்ட அடர்ந்த காட்டின் நடுவே யார் வீடு கட்டிக் கொண்டு வசிக்கிறார்கள்? எதற்காக?'' என்று விக்கிரமன் வியப்புடன் கேட்டான்.

''இந்த வீட்டைக் கட்டியவர் இப்போது இல்லை. அவர் இருந்தபோது இங்கே இவ்வளவு அடர்ந்த காடாகவும் இல்லை. அது பெரிய கதை; இராத்திரி உனக்குத் தூக்கம் வராவிட்டால் சொல்கிறேன்'' என்றான் ஒற்றர் தலைவன்.

பிறகு, அவன் வீட்டண்டை நெருங்கிக் கதவைத் தட்டினான்.

வீட்டின் சமீபத்தில் வந்ததும் விக்கிரமன் அது சாதாரண வீடு அல்லவென்பதைக் கண்டான். சித்திர மண்டபமோ அல்லது சிற்பக் கோவிலோ என்று சொல்லும்படியிருந்தது.

சற்று நேரத்துக்கெல்லாம் கதவு திறந்தது. கதவைத் திறந்தவள் ஒரு தொண்டு கிழவி. அவள் கையில் ஒரு கல் விளக்கு இருந்தது. கிழவி கதவைத் திறந்ததும், முன்னே நின்ற ஒற்றர் தலைவனை வியப்புடன் ஏறிட்டுப் பார்த்தாள். அப்போது அவளுடைய புருவங்கள் சிறிது மேலே சென்றன.

இடது கையின் ஆட்காட்டி விரலை அவன் லேசாகத் தன் உதடுகளின் மேலே வைத்து உடனே எடுத்துவிட்டான். அந்தச் சமிக்ஞையின் கருத்தைக் கிழவி உணர்ந்திருக்க வேண்டும். உடனே அவளுடைய முகத்திலிருந்த வியப்புக் குறி மாறிவிட்டது.

''வாருங்கள், ஐயா!'' என்று சொல்லி விட்டுக் கிழவி கதவை நன்றாய்த் திறந்தாள்.

இருவரும் உள்ளே பிரவேசித்தார்கள். அந்த வீட்டுக்குள் அடிக்கடி சென்று பழக்கப்பட்டது போல் குதிரை உள்ளே நுழைந்தது. அது நேரே கூடம், முற்றம் எல்லாவற்றையும் தாண்டிப் பின்புறக் கதவண்டை போய் நின்றது. கிழவி அங்கே சென்று அந்தக் கதவையும் திறந்தாள். குதிரை அதன் வழியாகப் புகுந்து சென்றது.

ஒற்றர் தலைவன் அப்போது விக்கிரமனைப் பார்த்து, ''இந்தக் குதிரையின் அறிவை என்னவென்று சொல்வது? முன்னொரு தடவை நான் இங்கே வந்தபோது பின்கட்டில் குதிரையைக் கட்டியிருந்தேன். இம்முறை அதுவே தன் இருப்பிடத்தைத் தேடிக் கொண்டு போகிறது. நானும் போய் அதைக் கொஞ்சம் கவனித்து விட்டு வருகிறேன். நீர் இங்கே உள்ள சிற்ப வேலைகளைப் பார்த்துக் கொண்டிரும்'' என்று கூறி விட்டுப் பின் கதவு வழியாகப் புகுந்து சென்றான். கிழவியும் கல் விளக்குடன் அவனைத் தொடர்ந்தாள்.

சுவரிலிருந்த மாடத்தில் நந்தா விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அதன் வெளிச்சத்தில் விக்கிரமன் சுற்று முற்றும் பார்த்தான். அது நிச்சயமாக வீடு அல்ல — சிற்ப மண்டபம்தான் என்று அவனுக்குத் தோன்றியது. எங்கே பார்த்தாலும் அற்புதச் சிற்பத் திறமை வாய்ந்த சிலைகள் காணப்பட்டன. சுவர்களில் பல வர்ணங்களில் தீட்டப்பட்டிருந்த சித்திரங்கள் காட்சியளித்தன. அவை வரையப்பட்டு அநேக வருஷங்கள் ஆகியிருக்க வேண்டுமென்றாலும், ஓவியங்களின் உயிர்க் களை சிறிதும் குன்றவில்லை.

சிலைகளிலும், சித்திரங்களிலும் முக்கியமாக ஒரு பெண்ணின் உருவம் அதிகமாய்க் காணப்பட்டது. அந்த உருவத்தில் தெய்வீக சௌந்தரியத்தின் களை தோன்றிற்று. நாட்டியக் கலைக்குரிய பல விதத் தோற்றங்களிலும் பாவங்களிலும் அந்தப் பெண் உருவத்தின் சிலைகளும் ஓவியங்களும் அமைக்கப்பட்டிருந்தன. அவற்றின் அழகையும் கலைத் திறனையும் கண்டு விக்கிரமன் பிரமிப்பை அடைந்தான். உறையூர்ச் சித்திர மண்டபத்திலும் மாமல்லபுரத்துக் கலை விழாவிலும் தான் முன்னர்

# பெரும்பாலான குழந்தைகள் போதுமான அளவு பால் குடிப்பதில்லை



# அதனால்தான் அவர்களுக்கு கால்ஷியம்-ஸாண்டோஸ்® வில்லைகள் தேவை

**இந்தியாவில் பெரும்பாலான குழந்தைகளுக்கு கால்ஷியம் பற்றாக்குறை உள்ளது.**

உங்கள் குழந்தைகளுக்கோ? அவர்களுடைய பற்களுக்கும் எலும்புகளுக்கும் போதுமான அளவு கால்ஷிய ஊட்டம் கிடைக்கிறதா என்று நீங்கள் சுலபமாகச் சரி பார்க்கலாம். ஒவ்வொரு குழந்தையும் தினம் 3 பெரிய டம்ளர்கள் பால் குடிக்கிறதா? இல்லையென்றால், அவர்களுக்கு கால்ஷியம்–ஸாண்டோஸ் வில்லைகள் தேவை!

கால்ஷியம்–ஸாண்டோஸ் பற்கள் வலுவாகவும், எலும்புகள் உறுதியாகவும் வளர்ச்சி பெற உதவுகின்றது. வைட்டமின் C, D மற்றும் B12 சத்துக்களின் வளம் கொண்ட ராஸ்ப்பெர்ரி சுவை கூடிய கால்ஷியம்–ஸாண்டோஸ் வில்லைகள் ருசி மிக்கவை-குழந்தைகளுக்கு மிகவும் பிடித்தமானவை!

**கால்ஷியம்-ஸாண்டோஸ்—ஸ்விட்ஸர்லாந்தில் ஸாண்டோஸ் உருவாக்கியுள்ள, உலகிலேயே தலை சிறந்த கால்ஷியம்!**



உங்கள் குழந்தைக்கு குறைந்த பட்சம், தினசரி 4 வில்லைகள் கால்ஷியம்–ஸாண்டோஸ் தேவை. 2 வில்லைகள் ஒவ்வொரு சாப்பாட்டிற்கு முன்பும்.



## கால்ஷியம்-ஸாண்டோஸ்®

வலுவுள்ள பற்களுக்கும்,
உறுதியான
எலும்புகளுக்கும்




daCunha/CS/19 N TAM

பார்த்த சித்திரங்கள், சிற்பங்கள் எவையும் இந்தப் பாழடைந்த மண்டபத்துக்குள் மறைந்து கிடக்கும் சிற்பங்களுக்கு அருகில் கூட வர முடியுமா என்று வியந்தான். இவற்றையெல்லாம் அமைத்த மகா சிற்பி எவனோ என்று அறிந்து கொள்ள அவன் துடிதுடித்தான்.

இதற்குள் ஒற்றர் தலைவன் குதிரையின் போஷாக்கைக் கவனித்துவிட்டு உள்ளே வந்தான். விக்கிரமன் அவனை நோக்கி, ''ஐயா! என்ன ஆச்சரியமான சிற்பங்கள் இவை! எந்த மகா சிற்பி இவற்றை அமைத்தவன்? தெய்வீக அழகு பொருந்திய ஒரு பெண்ணின் உருவம் இங்கே அதிகமாய்க் காணப்படுகிறதே! அந்தப் பெண் உண்மையாக இருந்தவளா? அல்லது சிற்பியின் சிருஷ்டியா? இந்த அற்புதச் சிற்பங்கள் எல்லாம் ஏன் இந்த இருண்ட காட்டுக்குள் கிடக்க வேண்டும்? ஏன் எல்லா ஜனங்களும் வந்து பார்க்கும்படி செய்யக் கூடாது? இதையெல்லாம் எனக்கு விவரமாகச் சொல்ல வேண்டும்'' என்றான்.

''நான்தான் சொன்னேனே, அது பெரிய கதை என்று. மிஞ்சியுள்ள இரவைத் தூக்கமின்றிக் கழிக்க உமக்கு இஷ்டமாயிருந்தால் சொல்கிறேன். எனக்குப் பசி பிராணன் போகிறது. இதோ பாட்டி பொரிமாவும் வெல்லமும் கொண்டு வருகிறாள். முதலில் சாப்பிடுவோம்'' என்றான் ஒற்றர் தலைவன்.

அவ்விதமே இருவரும் சாப்பிட்டார்கள். சாப்பிடும்போது, ''தங்கள் பெயர் இன்னதென்று இன்னும் எனக்குச் சொல்லவில்லையே'' என்றான் விக்கிரமன்.

''என் பெயர் வீரசேனன். உம்முடைய பெயர்?''

விக்கிரமன் சிறிது வியப்புடன், ''என் பெயர் தேவசேனன்'' என்றான்.

''ரொம்ப நல்லது; நம் இருவருக்கும் பெயர் ஒற்றுமை இருக்கிறது. ஆகையால் நீர் மனம் விட்டு என்னிடம் பேசலாம். உறையூருக்கு நீர் இவ்வளவு அவசரமாகப் போக விரும்பிய காரணம் என்ன? இரத்தின வியாபாரம் செய்வது உமது நோக்கமாயிருந்தால், முதலில் காஞ்சி நகருக்கல்லவா போக வேண்டும்?''

ஒற்றர் தலைவனிடம் நம்பிக்கையும் அன்பும் கொண்டிருந்த விக்கிரமனுக்கு இப்போது சந்தேகமும் பயமும் தோன்றின. ஒருவேளை இவன் நம்முடைய உண்மையைக் கண்டு பிடித்து விட்டால்...? கொஞ்சம் ஜாக்கிரதையாகவே நடந்து கொள்ள வேண்டும்.



### புரி ஜகந்நாதரும் ஆங்கிலச் சினிமாவும்!

''நேற்று ஒரு படம் பார்த்தேன்; பிரமாதம்!'' என்றேன். ''என்ன படம்?'' என்றார் நண்பர் ராதாகிருஷ்ணன். ''ஜகர்நாட்-ஆங்கிலப் படம்'' என்றேன்.

''ஓ! ஜகர்நாட் என்றால் என்ன அர்த்தம், தெரியுமா?'' என்றார் நண்பர்.

''அதில் வரும் கதாநாயகன் பெயர்.''

''அது சரி, ஆனால் அது காரணப் பெயர். காரணம் என்ன?''

நான் விழித்தேன். நண்பர் சொன்னார்: ''புரி ஜகந்நாதர் ஆலயத் தேர் இருக்கிறதல்லவா? அது இழுக்கப்படும்போது சக்கரத்துக்கு முன் விழுந்து உயிர் துறக்கும் மூடப் பழக்கம் முன்பு நிலவியது. இதைப் பார்த்த ஆங்கிலேயர், உயிர்த் தியாகத்துக்குத் துணிபவர்களை 'ஜகர்நாட்' என்று அழைத்தனர். (ஜகந்நாதர் என்பதன் திரிபு.) இரண்டாம் உலகப் போரின் போது, விழுந்தும் வெடிக்காமலிருக்கும் குண்டுகளை அணுகி, அவற்றைச் சக்தியற்றுப் போகச் செய்யவென்றே சிலர் இருந்தார்கள். ரொம்ப ஆபத்தான காரியம். வெற்றி கிட்டும் முன் குண்டு வெடித்தால் ஆள் அரோகராதான்! இவர்களுக்கு 'ஜகர்நாட்' என்ற பெயர் நிலவியது.''

''அப்படியா சமாச்சாரம்!'' என்றேன் நான். ''இந்த ஜகர்நாட் திரைப்படத்திலும் கூடக் கப்பலில் வைக்கப்பட்டுள்ள டைம்பாம்களை அவை வெடிக்கு முன்னர் சக்தி இழக்கச் செய்யும் நிபுணனாகத்தான் கதாநாயகன் வருகிறான்!'' என்றேன், தெளிவு பெற்றவனாக.

— குட்டி கிருஷ்ணன்

''என்னுடைய தாயார் உறையூரில் இருக்கிறாள். அவளைப் பார்க்கும் ஆவலில்தான் சீக்கிரம் போக விரும்புகிறேன்.''

''இதென்ன? நீர் செண்பகத் தீவைச் சேர்ந்தவர் என்றல்லவா சொன்னீர்?''

''என்னுடைய சொந்த ஊர் உறையூர்தான். சில வருடங்களுக்கு முன்பு பொருள் தேடுவதற்காகச் செணபகத் தீவு சென்றேன். உறையூர் பல்லவ ராஜ்யத்துடன் சேர்ந்து விட்ட பிறகு அதன் பழைய செழிப்பெல்லாம்தான் போய்விட்டதே! இராஜ குடும்பம் இல்லாத ஊரில் இரத்தின வியாபாரம் என்ன நடக்கும்?''

இராஜ குடும்பத்தைப் பிரஸ்தாபித்தால், ஒருவேளை ராணி அருள்மொழியைப் பற்றி வீரசேனன் ஏதாவது சொல்லக் கூடுமென்று விக்கிரமன் எதிர்பார்த்தான். ஆனால் அவனுடைய

எண்ணம் நிறைவேறவில்லை. அதன் பின் வீரசேனன் சாப்பிட்டு முடியும் வரையில் மௌன விரதத்தை மேற்கொண்டிருந்தான்.

சாப்பாடு முடிந்த பிறகு, விக்கிரமன் மறுபடியும் அந்தச் சிற்ப மண்டபத்தின் கதையைச் சொல்லும்படி கேட்டான்.

''ஐயா, தேவசேனரே! உமக்கு மரணத்தில் நம்பிக்கை உண்டா?'' என்று ஒற்றர் தலைவன் கேட்டபோது, விக்கிரமனுக்கு ஒன்றும் புரியவில்லை.

''இதென்ன கேள்வி? மரணத்தில் நம்பிக்கை உண்டா என்றால்?...''

''அதாவது மனிதர்கள் உண்மையில் மரணமடைகிறார்கள் என்பதாக நீர் நினைக்கிறீரா? 'உயிர் போய்விட்டது' என்று நாம் சொல்லும்போது, உண்மையில் உயிர் போகிறதா? அல்லது உடல் மட்டும் போய் உயிர் இங்கேயே இந்த உலகத்திலேயே, சுற்றிக் கொண்டிருக்கிறதா? இறந்து போனவர்கள் நம்மைப் பற்றி நினைக்கிறார்களா? நம்மைப் பார்க்க வருகிறார்களா? நம்முடைய நடவடிக்கைகளை அவர்கள் கவனிப்பதுண்டா?''

விக்கிரமனுக்கு ஏனோ தன்னுடைய தந்தை பார்த்திப மகாராஜாவின் நினைவு வந்தது. அவருக்குத் தான் கொடுத்த வாக்குறுதியும் ஞாபகம் வந்தது. அவர் இப்போது இவ்வுலகில் இருந்து தன்னுடைய செயல்களைக் கவனித்துக் கொண்டு வருகிறாரா?

''எனக்கும் உங்களைப்போல் சில சமயம் தோன்றுவதுண்டு. அந்தச் சந்தேகத்தை தீர்ப்போரைத்தான் காணோம்.''

''எனக்கென்னவோ, மரணம் என்பதே பொய் என்று தோன்றுகிறது. மரணத்துக்காக விசனப்படுவதும் பெருமூடத்தனம் என்று நினைக்கிறேன். இதோ இந்த வீட்டில் முப்பது வருஷத்துக்கு முன்னாலே ஆயனச் சிற்பியும் அவருடைய மகள் சிவகாமியும் வாழ்ந்தார்கள். அப்போதெல்லாம் இங்கே ஜல்ஜல் என்ற சதங்கை ஒலியும், கல்கல் என்ற கல்லுளி ஒலியும் மாறி மாறிக் கேட்டுக் கொண்டிருக்கும். சிவகாமி அற்புத நடனம் ஆடுவாள். அவளுடைய நடனத் தோற்றங்களைப் பார்த்துப் பார்த்து ஆயனச் சிற்பி சித்திரம் எழுதுவார்; சிலைகள் அமைப்பார்.....''

''ஓகோ! இந்தத் தெய்வீகக் கலையுள்ள பெண் அந்தச் சிவகாமிதானா?''

''ஆமாம்; அப்போது நான் இங்கே அடிக்கடி வருவதுண்டு. மகேந்திர சக்கரவர்த்தியின் காலம். அவருடைய புதல்வருக்கு அச் சமயம் உம்முடைய வயது தானிருக்கும். அவருடன் — நரசிம்ம வர்மருடன் — நானும் வருவேன். தூரத்தில் வரும்போதே, இந்த வீட்டுக்குள்ளிருந்து சதங்கையின் ஒலி கிளம்புவது கேட்கும். ஆயனரும் சிவகாமியும் இப்போது இங்கே இல்லை என்று என்னால் நம்பவே முடியவில்லை. அவர்கள் இன்னும் இங்கே இருக்கிறார்கள் என்றே நினைக்கிறேன். இதோ! உற்றுக் கேட்டால் சதங்கையின் ஒலியும் கல்லுளியின் ஒலியும் என் காதுக்குக் கேட்கின்றன...''

விக்கிரமனுடைய ஆவல் அளவு கடந்து பொங்கிற்று. ஆயனரையும் சிவகாமியையும் பற்றி விவரமாய்ச் சொல்ல வேண்டுமென்று வீரசேனரை வேண்டிக் கொண்டான். அவரும் விவரமாகச் சொன்னார். ஆயனருடைய அபூர்வ சிற்பத் திறமையைக் குறித்தும், அவருடைய பெண்ணின் அற்புத சௌந்தரியத்தைப் பற்றியும் அவளுடைய நடனக் கலைத் திறனைப் பற்றியும் சொன்னார். நரசிம்ம சக்கரவர்த்தி, இளவரசராயிருந்த காலத்தில் அவருக்கும் சிவகாமிக்கும் ஏற்பட்ட தெய்வீகக் காதலைப் பற்றி லேசாகக் குறிப்பிட்



புல்லட் போன்ற சிறந்த மோட்டார் சைக்கிள்களை உற்பத்தி செய்து புகழ் பெற்ற என்ஃபீல்ட் கம்பெனியார் தொழில்களைக் கிராமங்களுக்குக் கொண்டு போக வேண்டும் என்ற திட்டத்தின் கீழ் இராமநாதபுரம் ஜில்லாவில் ஆனைக்காரப்பட்டி என்ற கிராமத்தில் தொடங்கிய என்ஃபீல்ட் தொழிற்சாலை இப்போது கால நிலைக்கு ஏற்ற ஒரு புது மோட்டார் சைக்கிளான என்ஃபீல்ட் - 200 வழங்கியிருக்கிறது.

இதற்கு இப்போது வெளி நாடுகளில் ஒரு ''மவுசு'' ஏற்பட்டிருக்கிறதாம். (வெளியில் சொல்லாதீர்கள். ஜப்பான் போட்டிக்கு வந்துவிடப் போகிறது) இதன் விலை இன்று தமிழ்நாட்டில் ரூ. 5600. இதில் கிட்டத்தட்ட மூன்றில் ஒரு பங்கு சர்க்காருக்கு வரிகளாகப் போகிறது.

டார். வடக்கேயிருந்து இராட்சதப் புலிகேசி படையெடுத்து வந்ததினால் அந்தக் காதல் தடைப்பட்டது பற்றியும், சிவகாமியைப் புலிகேசி சிறை பிடித்துச் சென்றது பற்றியும் விவரித்தார். சிவகாமியை விடுவிக்க நரசிம்மர் செய்த முயற்சியையும், சிவகாமியின் சபதத்தையும், அதை நரசிம்மர் நிறைவேற்றி வைத்ததையும், இவ்வளவுக்கும் பிறகு சிவகாமி தன்னுடைய காதல் பூர்த்தியாக முடியாத காதல் என்பதை உணர்ந்து நெஞ்சு உடைந்ததையும் பற்றிச் சொன்னார்.

கதையைக் கேட்டுக் கொண்டு வரும்போது விக்கிரமன் பல தடவை கண்ணீர் விட்டு விட்டான். நரசிம்ம சக்கரவர்த்தியின் மேல் அவனுக்கிருந்த மதிப்பு பன்மடங்கு உயர்ந்தது. அவரிடம் அவனுக்கு அபிமானமே உண்டாகி விட்டது. பார்த்திப மகாராஜாவுக்குத் தான் கொடுத்த வாக்குறுதியை நினைத்துக் கொண்டு, நரசிம்மர் தன்னுடைய குலப் பகைவர் என்பதை ஞாபகப்படுத்திக் கொண்டான்.

கதை முடிந்த சமயம், வெள்ளி முளைத்து விட்டது. ஒரு நாழிகைப் பொழுதுதான் அவர்கள் தூங்க முடிந்தது. பட்சிகளின் உதய கீதத்தினால் எழுப்பப்பட்ட விக்கிரமன் கண் விழித்த போது, முதல் நாள் இரவின் சம்பவங்கள் எல்லாம் கனவோ என்ற சந்தேகம் உண்டாயிற்று. சுற்றுமுற்றும் பார்த்து, ''கனவல்ல; எல்லாம் உண்மைதான்'' என்று நிச்சயம் பெற்றான்.

''ஐயா, தேவசேனரே! குதிரை சிரம பரிகாரம் செய்து கொண்டு சித்தமாயிருக்கிறது. நம்மைப் போல் அது இரவில் கண் விழிக்கவில்லையல்லவா? நீர் காலைக் கடன்களை முடித்ததும் உறையூருக்குக் கிளம்பலாம்'' என்று ஒற்றர் தலைவனின் குரல் வெளியிலிருந்து கேட்டது.

அவ்விதமே காலைக் கடன்கள்முடிந்து, கிழவி அளித்த எளிய உணவையும் உட்கொண்ட பின் விக்கிரமன் வீரசேனரிடம் விடைபெற்றான். அப்போது அவன், ''ஐயா! உமக்கு நான் எவ்வளவோ கடமைப்பட்டிருக்கிறேன். என் உயிரைக் காப்பாற்றியதற்குப் பிரதி ஒன்றும் செய்ய முடியாது. ஆனாலும் குதிரையை இலவசமாகப் பெற்றுக் கொள்ள எனக்கு விருப்பமில்லை. குதிரைக்கு ஈடாக இந்த இரத்தினங்களைப் பெற்றுக் கொள்ள வேண்டும்'' என்று ஒரு கைப்பிடி இரத்தினங்களை அள்ளிக் கொடுத்தான்.

''நீர் சொல்வது தவறு. என் அருமைக் குதிரையை நான் உமக்குத் தானம்



நன்றி : அமெரிக்கன் ரெவ்யூ

செய்யவில்லை; இரவலாகத்தான் கொடுத்திருக்கிறேன். உறையூரில் உமது காரியத்தை முடித்துக் கொண்டு இதே இடத்தில் வந்து திருப்பிக் குதிரையை ஒப்புவிக்க வேண்டும்'' என்றான் ஒற்றர் தலைவன்.

''அப்படியே செய்கிறேன்; ஆனாலும் என்னுடைய நன்றிக்கு அறிகுறியாக இந்த இரத்தினங்களைப் பெற்றுக் கொள்ள வேண்டும்'' என்றான் விக்கிரமன்.

வீரசேனன் அதற்கிணங்கி இரத்தினங்களைப் பெற்றுக் கொண்டான்.

விக்கிரமன் குதிரை மீதேறியதும், ஒற்றர் தலைவன் குதிரையைத் தட்டிக் கொடுத்து, ''ஐயா! இந்தக் குதிரை அடிக்கடி உறையூருக்குப் போய்ப் பழக்கமானது. அதற்கே பாதை நன்றாய்த் தெரியும். அதன் வழியே விட்டுவிட்டால் உம்மைக் கொண்டு போய்ச் சேர்த்துவிடும். நீர் வழி விசாரிக்க வேண்டிய அவசியமே இல்லை'' என்றான்.

குதிரை போகத் தொடங்கியது. காட்டுப் பாதையில், சிற்பியின் வீடும் ஒற்றர் தலைவனும் மறையும் வரையில் விக்கிரமன் திரும்பிப் பார்த்துக் கொண்டே போனான். காலை வெளிச்சத்தில் அந்த ஒற்றர் தலைவனைப் பார்த்த போது, ஆஜானுபாகுவான அவனது கம்பீரத் தோற்றமும், முகப் பொலிவும் விக்கிரமனுடைய மனத்தைப் பெரிதும் கவர்ந்தன. வெகு நேரம் வரையில், அந்தத் தோற்றம் அவனுடைய மனத்தை விட்டு அகலவில்லை. (தொடரும்)

# எண்ணும் எழுத்தும்...

த. முரளி

மூன்னிரவு. மணி எட்டு. போலீஸ் ஸ்டேஷனில் நானும் இன்ஸ்பெக்டர் சாரதியும் பேசிக் கொண்டிருந்தோம். டெலிபோன் ஒலித்தது. சாரதி எடுத்தார்.

''போலீஸ் ஸ்டேஷன் ஹியர்....''

''..........''

''என்ன? இப்போதா? நீங்கள் யார்?''

''.........''

ஃபோனைக் கீழே வைத்த சாரதி என்னைப் பார்த்து, ''ஹரி அப், ப்ளௌனிங்! நீயும் வா! 'வெங்கடேசுவரா பாங்கில் யாரோ உள்ளே போனதைப் பார்த்து யாரோ ஃபோன் பண்ணுகிறார்கள்'' என்றார். பாங்கை அடைந்தோம் ஜீப்பிலே. கதவுப் பூட்டு உடைந்து கீழே கிடந்தது. கதவைத் தள்ளிப் பார்த்தோம். உள்ளே தாழ் போடப்பட்டிருந்தது.

என் காலில் ஏதோ இடறியது. காவலாளி மயக்கமாகக் கிடந்தான். பக்கத்தில் 'ட்யூப் லைட்' சிதறிக் கிடந்தது. கான்ஸ்டபிள்களைப் பார்த்துக் கொள்ளச் சொல்லிவிட்டு, இருவில், உள்பக்கத் தாழ்ப்பாளை ஊகம் பண்ணிச் சுட்டேன். மூன்றாவது குண்டில், உள்ளே தாழ்ப்பாள் கழன்று விழும் 'ணங்' கென்ற ஓசைக் கேட்டது. 'குற்றவாளி உஷார் அடைந்திருப்பானோ?' என்று எண்ணிக் கொண்டே உள்ளே நுழைந்தோம். ஒரே இருள்...'பென்' டார்ச்சை எடுத்தேன். மெல்லிய, நீண்ட ஒளிக்கீற்று வட்ட வடிவில் 'போகஸ்' ஆகி, உள்ளே சுற்றி மாடிப்படியைக் காட்டியது. படிகளின் மீதாக, ஊறியது ஒளிக்கீற்று. பூட்ஸுடன் கூடிய இரு கால்கள் தென்பட்டன. அடுத்த கணம்.... 'டுமீல்'... நான் வலியால் கையைப் பிடித்துக் கொண்டேன். 'டார்ச்' எகிறி விழுந்து.. உருண்டது அணையாமல்.

''என்ன ஆயிற்று பிளௌனிங்?'' என்ற சாரதியின் குரல் வெளியிலிருந்து கேட்டது. அதோடு, மாடிப்படியில் யாரோ இறங்கி வரும் சப்தம்... என்னை ஒரு கரம் தொட்டது. ''ஹாப்'' பிடித்துக் கொண்டேன். ''ப்ளௌனிங், விடு நான்தான்'' என்றார் சாரதி. திடீரென்று எங்களைக் கடந்து ஏதோ ஓடிய உணர்வு. திறந்திருந்த கதவைப் 'படா' ரெனச் சாத்திக் கொண்டு ஓடியது ஒரு மனித உருவம்.

''கோட்டை விட்டோம்! ப்ளௌனிங்! எழுந்திரு! என்ன ஆயிற்று உனக்கு?'' நான் இடது கையால் 'டார்ச்'சை எடுத்தேன். வலது கையால் மீண்டும் அறை முழுதும் மாடிப்படியிலும் டார்ச் அடித்து யாரையும் காணாது வெளியே வந்தோம். கான்ஸ்டபிள்கள் ஓடியவனைப் பிடித்திருப்பார்களென்று. ஆனால் அவர்களோ காவலாளியை மயக்கம் தெளிவித்துக் கொண்டிருந்தார்கள். சாரதி அவர்களைக் கடிந்து கொண்டார். நான் வலது மணிக்கட்டைக் காண்பித்தேன். இரத்தம் வழிந்து கொண்டிருந்தது.

''என்ன இது? என்ன ஆயிற்று?''

''அவன் மாடிப்படியிலிருந்து 'டார்ச்'சை இலக்காக்கிச் சுட்டிருக்கிறான்!'' என்றேன்.

''அடேயப்பா, அத்தனை குறியா? வா, டாக்டரிடம் போவோம்'' — கான்ஸ்டபிள்களை அமர்த்திவிட்டு பூட்டைக் 'கர்சீப்'பில் எடுத்துக் கொண்டு புறப்பட்டோம்.

மறுநாள் காலை மணி எட்டு.

''குட் மார்னிங், ப்ளௌனிங், வலி எப்படி?'' என்றார் சாரதி.

''கவலைப்பட ஒன்றுமில்லை. அது சரி பூட்டில் ரேகை ஏதாவது?''

''நத்திங். அது போகட்டும், நேற்றுபோன் பண்ணியது யாராயிருக்கும்? காவலாளியினால் ஒன்றும் சொல்ல முடியவில்லை, யாரோ அடித்ததுதான் தெரியுமாம்.''

''எனக்கும் தெரியவில்லையே!'' என்றேன்.

''அதுபோகட்டும். நேற்றிரவு சுமார் ஒன்பது மணிக்கு, நம்ம '303' பக்கத்து 'டெலிபோன் பூத்தில்' கிடந்ததாக இந்தக் காகிதத்தைக் கொடுத்தார்'' — அதை வாங்கிப் பார்த்தேன். பல நம்பர்கள் கீழ்க் கண்டவாறு எழுதப்பட்டிருந்தன:

25 15 21  16 8 15 14 5  16 15 12 9 3 5
1 20 8'  12 5 20  20 8 5 13  2 5
3 8 5 1 20 5 4,  12 5 20'  21 19
12 15 15 20  20 15 13 15 18 18 15 23
23 9 12 12 9 1 13
2, 18 1 13 1  19 20 18 5 5 20

இரவு ஒன்பது மணி. காகிதத்தை வைத்துக் கொண்டு யோசித்தேன். ஃபோன் நம்பரா? இல்லை. ஏனென்றால் இரட்டை எண்களாகவும், ஒற்றை எண்களாகவும் குறிப்பிட்ட இடைவெளி விட்டு எழுதியிருந்தது. உதாரணமாக, 25 15 21 என்ற எண் மூன்று தனி எண்களாக எழுதப்பட்டிருந்தது. இடையில் ஒரே ஒரு 8 மட்டும் மேலே ஒரு 'கமா'வோடு இருந்தது. மணியைக் குறிக்கத் தான் அப்படிப் போடுவார்கள். நேற்று

சரியாக எட்டு மணிக்குத்தானே போன் வந்தது! சரி இந்த எண்கள் எதைக் குறிக்ின்றன? பல விதமாக யோசித்துக் கடைசியில் சோர்வடைந்து. வாட்சைப் பார்த்தேன். மணி ஒன்பது இருபத்தைந்தில் நின்றிருந்தது. வேலையாள் ராபர்ட்டைக் கூப்பிட்டு மணி பார்த்து வரச் சொன்னேன். ராபர்ட் ஒரு ஊமை. ஆங்கிலம் ஓரளவு தெரியும். ஆனால் மணி பார்க்கத் தெரியாது. அவனே அபூர்வமாகத்தான் மணி பார்க்கச் சொல்வேன். ராபர்ட் திரும்பி வந்து என்னிடம் ஒரு காகிதத்தை நீட்டினான். அதில் 'X' என்று எழுதியிருந்தது. 'எக்ஸா? இதற்கு என்ன அர்த்தம்?' என்று நான் யோசிக்கவில்லை. ஏனெனில் அந்தச் சுவர்க் கடிகாரத்தில் ரோமன் எண்களே எழுதப்பட்டிருக்கும். மணி பத்து. பத்துக்கு ரோமன் எண் 'X'. அதைத்தான் அப்படி ஆங்கிலத்தில் எழுதியிருக்கிறான்.

ஏதோ பொறி தட்டியது. நான் பார்த்த எண்களுக்கும் எழுத்துக்களுக்கும் ஏதாவது சம்பந்தமிருந்தால்? (Xக்கும் 10க்கும் இருப்பது மாதிரி) ஏனென்றால் எந்த இரட்டை எண்ணும் 26 - ஐத் தாண்டவில்லை. ஆங்கில எழுத்தாய்த் தானிருக்குமென்று எண்ணிக் கொண்டு, கீழ்க் கண்டவாறு எழுதிக் கொண்டேன்:

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| A-1 | E-5 | I- 9 | M-13 | Q-17 | U-21 | Y-25 |
| B-2 | F-6 | J-10 | N-14 | R-18 | V-22 | Z-26 |
| C-3 | G-7 | K-11 | O-15 | S-19 | W-23 | |
| D-4 | H-8 | L-12 | P-16 | T-20 | X-24 | |

பிறகு, எண்களை எழுத்துக்களோடு ஒப்பிட்டேன். உதாரணமாக, 16 15 12 9 3 5 என்ற எண்ணை ஒப்பிட்டதில் 16–P, 15–O, 12–L, 9–I, 3–C, 5–E, (POLICE) (போலீஸ்) என்று வந்தது. ஆங்கிலத்தில்,

'You phone police at 8'. Let them be Cheated. Let us loot tomorrow'

William

2, Rama Street

என்று வந்தது. அதாவது, 'நீ எட்டு மணிக்குப் போலீசுக்குப் போன்செய். அவர்கள் ஏமாறட்டும். நாம் நாளை கொள்ளையடிப்போம்'

வில்லியம்,

2, ராமா வீதி, என்று பொருள்.

இப்போது, நானும் சாரதியும் வில்லியத்தைப் பிடிக்கப் போய்க் கொண்டிருந்தோம். "வெரி ஃபைன் வொர்க், ப்ளொனிங்! எப்படி இந்தக் கோணத்தில் நினைத்தாய்?" என்றார் சாரதி.

'எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்!' என்று கூறிய நான், வில்லியமின் தேதியில்லாக் கடிதம் ஒரு நாள் தாமதமாக அவன் கூட்டாளிக்குக் கிடைத்ததைக் கணக்காக விளக்கிய பொழுது அவர் கண்கள் வியப்பால் விரிந்தன.



*வட்டமேஜை:*

# விசாரணையின்றி சிறையில் வாடியவர்களுக்கு நீதி வேண்டும்!



☐ ''ஜனதா கட்சி'' எனும் பெயரில் இணைந்துள்ள கட்சிகள், 'இதை இதைச் செய்வார்களா?' என்று கேட்பது போன்று எதை எதைச் செய்ய வேண்டும் என்பதைப் பட்டியல் போட்டுக் காட்டிய தங்களின் தலையங்கம் எதிர்க் கட்சிகளை — ஏன் மக்களையும் சிந்திக்கத் தூண்டும்.

விருத்தாசலம்,
3–2–77 வெ. சம்பந்தம்

☐ பத்திரிகை சுதந்திரம் தளர்த்தப்பட்டவுடன் தலைகால் புரியாமல், ஒருசார்பாக அரசைக் கடுமையாய் விமரிசிக்கும் பத்திரிகைகளுக்கிடையில், நேர்மையான தலையங்கம் எழுதி, ஜனதா கட்சியின் கடமைகளையும் நினைவுறுத்திய கல்கியின் நடுநிலையை மனதார வாழ்த்துகிறேன்.

பொள்ளாச்சி
4–2–77 தெறச் முத்துராஹிம்

☐ அரசியல் சுயமரியாதை இழந்த தலைமையின் கீழ் இயங்கும் தி.மு.க.வைத் தங்களுடன் இணைத்துக் கொள்வார்களேயானால், ஜனதா கட்சி ஒரு தொழு நோய்க் கூடாரமாகத்தான் மக்களின் கண்களுக்குத் தென்படும்.

இன்றைய சூழ்நிலையில் அசுர பலத்துடன் இந்திரா காங்கிரஸ் வெற்றி பெறுவதும் ஆபத்தாக முடியும் என்பதில் ஐயமில்லை. இந்த நெருக்கடி நிலையில் எதிர்க் கட்சிகள் ஒன்றாக (வெறும் தேர்தலுக்காக இல்லாமல் கொள்கை ரீதியாகவும் உடன்பாடு ஏற்பட்டு ஒருங்கிணையுமேயானால்) இணைந்த 'ஜனதா கட்சி' தேர்தலில் ஒரு பலமுள்ள எதிர்க் கட்சியாக வருவது நல்லது.

விழுப்புரம்
3–2–77 ஏ. எம். அலி

☐ காமராசருக்குப் பிறகு தளழக்கும் பழைய காங்கிரஸ் தங்கள் ஆலோசனையை கேட்டால் தமிழகத்தில் அஸ்தமித்துவிடும். பரிதாபகரமானதாகஆகிவிடும். அதுவும் ஆளும்கட்சிக்கே விட்டுக் கொடுக்கச் சொல்கிறீர்கள். என்னைப் போன்ற தொண்டர்களெல்லாம் எதிர்க் கட்சி அரசியலில் இருந்த பாவத்திற்காக ஓராண்டு மிசாவுக்குப்பலியானோம். தி. மு.க.வில் நான் ஒரு சாதாரணத் தொண்டன். இப்படியேதான் நாடு பூராவும் லட்சக்கணக்கான எதிர்க்கட்சி தொண்டர்களின் நிலை. பல குடும்பங்கள் கண்ணீரும் கம்பலையுமாக இருந்தன. இந்த ஓராண்டு காலத்தில் தவித்தவர்களின் கண்ணீருக்கு இந்த நாடு நீதி வழங்க வேண்டாமா?

திருச்சி-2
4–2–77 டி. எஸ். குஞ்சிதபாதம்

☐ இந்த வாரக் கல்கி பார்க்க வேதனைப்பட்டோம். எங்கள் காங்கிரசும், தி. மு. க.வும் போட்டியிட்டால் இந்திரா காங்கிரஸ்தான் வரும். சந்தேகமேயில்லை. பொது ஜனங்களிடம் வசூல் செய்ய நேரம் இல்லை. போட்டியிடவும் தகுந்த நபர்கள் இல்லை. தி.மு.க. கூட்டு இல்லையானாலும் நின்று ஜெயிக்கப் போதுமான நிதி, வாய்ப்பு, வசதியெல்லாம் குறைவு. ஒரு வருஷமாக தி.மு.க. சிறையில் இருந்தது. இப்போது அதற்கு அசுர பலம் வந்து விட்டது. பொது மக்களின் அனுதாபம் நிறையக் கிடைத்துள்ளது. அதனால் ப.காவோடு தி.மு.க. சேர்ந்தால்தான் நல்லது. இல்லையானால் தமிழ்நாட்டில் நாங்கள் இல்லை.

சென்னை–1
3–2–77 எஸ். கோபாலரத்னம்

☐ 23–1–77 கல்கி இதழில் மின்சார விநியோகத்தை மின் வாரியம் ஏற்ற பிறகு கட்டணங்கள் உயர்த்தப்பட்டுள்ளது பற்றி திருசி. சுப்பிரமணியம் என்ற பெயரில் ஒருவர் எழுதியுள்ள கடிதத்தில் குறிப்பிட்டுள்ளது யாவும் உண்மைதான்.

பொதுமக்கள் தங்கள் குறைகளைத் தெரிவித்துவிட்டார்கள். ஊழியர்கள் குறைகள் தெரிய வேண்டாமா?

எங்கள் நிறுவனம் அரசுடைமை ஆகி மூன்று ஆண்டுகள் முடிந்து விட்டன. ஊழியர்கள் முன்னைவிடக் கடுமையாக அதிகாரிகள் சொற்படி கேட்டு உழைத்து வருகிறோர்கள். பாக்கித் தொகை நிற்காமல் வசூல் நன்கு செய்யப்படுகிறது.

ஆனால் ஊழியர்களுக்கு மின்வாரிய சம்பள விகிதம் இதுவரை தரப்படவில்லை. பழைய சம்பளத்திலேயே இருக்கிறோம். 'பிட்மெண்ட்' எப்போது வரும் என்பதே கேள்விக் குறியாகியுள்ளது. எங்களுடன் வேலை பார்க்கும் வாரிய ஊழியர்களுக்கு காலை பத்தரைக்கு ஆபீஸ் தொடங்குகிறது. நாங்கள் பத்து மணிக்குப் போக வேண்டும். அவர்களுக்கு இரண்டாவது சனிக் கிழமை விடுமுறை. எங்களுக்கு அது கிடையாது! இன்னும் அவர்களுக்கு இருக்கும் எத்தனையோ சலுகைகள் எங்களுக்குக் கிடைக்காமல் ''மூத்தாள் குழந்தை''களாக நாங்கள் பணியாற்றி வருகிறோம்.

கும்பகோணம்
4–2–77 கே. ரகுபதி

## இறை ஒளி

இறை ஒளி கூட்ட இஸ்லாமியச் சூழலில் உருவாகியுள்ள இந்தப் படத்தின் பொருத்தமான, பொருள் பொதிந்த தலைப்பு — **நூரே இலாஹி**. ஆண்டவனை நம்பி வாழ்கின்ற குடும்பம் ஒன்று; நம்பாத குடும்பம் ஒன்று. இரண்டுக்கும் முடி போட்டுத் தன்னை உண்டு என்று நிரூபித்துக் கொள்ள ஆண்டவன்தான் எத்தனை அற்புதங்கள் நிகழ்த்த வேண்டியிருக்கிறது? அத்தனைக்கும் ஈடு கொடுத்து நடிக்கிறார்கள் — நாஸிர் ஹுஸேன், ஜீதேன், லோனு, அன்ஸாரி போன்றவர்கள். 'குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்தில்' என்பதைக் குழந்தை 'நூர்' ஆக வரும் சிறுமி வெகு இயல்பான தன் நடிப்பால் நம்ப வைக்கிறாள். அவன் அருள் பெற்ற குழந்தை என்பதால், அவளே நூரே இலாஹீ ஆகத் தோன்றி விடிவும் முடிவும் காண்கிறாள்.

பகவான் பக்தர்களை பட்டும்தான் சோதிக்கிறார் என்பதில்லை. பக்தர்கள் அல்லாதவரையும் சோதிக்கிறார். அவர்களைப் புடம் போட்ட பொன்னாக்கித் தன்னவராகவும் ஆக்கிக் கொள்கிறார். ஆண்டவனின் இந்த அருஞ்செயலை அருமையாக விளக்குகிறது இந்தப் படம். கருத்தில் கவனம் சென்ற

---

இந்தப் படத்தில், விவாகரத்து வழக்கு, தாய்ப்பாசம், தந்தைப்பாசம், நட்பின் பெருமை, அபார்ஷன், நீச்சல் குளத்தில் அழகுநங்கை, தாயின் பெருமை, திரைக்கதையின் கருத்தை விளக்கும் பொம்மலாட்ட காட்சி, அடங்காப்பிடாரி மனைவிமார்கள். அடக்கும் கணவன்மார்களின் வீரம் ஆகியவை இருக்கின்றன.

இப்படத்தில் இல்லாதது முழுசாக ஒரு கதை!

திரைக்கதையில் எல்லாம் இருக்க வேண்டும் என்ற பேரார்வத்தில் பல திரைக்கதை 'மசாலாக்'களைச் சேர்த்திருக்கிறார்கள். ஆனால் எல்லாம் ஒன்று சேர்ந்து சுவையைக் கூட்டவில்லையே.

ஜெய்சங்கர், கதாநாயகன். ஸ்ரீப்ரியா கதாநாயகி. இரண்டு பேருக்கும் நிறைய சான்ஸ் தரப்பட்டிருக்கிறது. இருவரும் ஒரு சான்ஸையும் நழுவ விட்டுவிடவில்லை.

பழைய நடிகை ராஜசுலோசனா வில்லி மாதிரி வந்து நல்லவளாக மாறுகிறார். அநுபவம் பேசுகிறது. மேஜர் சுந்தரராஜன் முதலில் மனைவிக்கு அடங்கியவராக வந்து பின்னால் சீறுகிறார்.

சுருளிராஜன், மனோரமா, குமாரி சச்சு ஆகியவர்கள் வந்து நகைச்சுவை வழங்கப் பெருமுயற்சி எடுத்துக் கொண்டிருக்கின்றனர். மக்கள் அந்த முயற்சியைப் பாராட்டி ரசிக்க வில்லையென்றால் அதற்கு அவர்கள் என்ன செய்வார்கள்!

திரைக்கதை, வசனம்: மகேந்திரன்.. டைரக்ஷன்: எஸ். பி. முத்துராமன். ஒளிப்பதிவு: பாராட்டிக் கூறும்படியாக இப்படத்தில் எந்தக் காட்சியிலும் அமையவில்லை.

தப்பித் தவறிக் கூடத் தமிழ்ப்படம் தலையெடுக்கவிட மாட்டார்கள் போலிருக்கிறதே!

—காந்தன்



பின் குறைகளில் நாட்டம் கொள்ளாது தானே?

என்றாலும் தயாரிப்பாளர்கள், கவைகளில் ஒன்றான அருவருப்பைச் சிறிது தூக்கலாகக் காட்டிச் சில இடங்களில் ரசிகர்களை முகம் சுளிக்கவைத்துச் சோதித்து விடுகிறார்கள்.

ஆனால் இசை அமைப்பு அப்படிச் சோத னைக்குள்ளாக்காமல் இன்பம் கூட்டுகிறது: ஏன், இறையின்பமே காட்டுகிறது. அதே நேரத்தில் வேரோடி விட்ட வரதட்சிணைக் கொடுமையின் விபரீத விளைவுகளையும் சுட் டிக் காட்டிச் சமுதாயத்துக்குப் படிப்பினையும் புகட்டுகிறது **இறை ஒளி.** — ரா. வீ.



---

**உ**யிருக்கு உயிரான இரு நண்பர்கள்; உயிருக்கு உயிரான இரு தோழிகள். தோழி களில் ஒருத்திக்கு ஒரு கார் விபத்தில் இதயம் பலவீனமடைகிறது. இன்னொருத்தி பிரசவத் தில் இறந்து விடுகிறாள் — இறந்தவளின் இத யம் தோழிக்குப் பொருத்தப்படுகிறது.. இறந்தவளின் கணவன் தன் மனைவியின் இத யம் அவளிடம் இருப்பதினாலே அவளிடம் தன் மனைவியையே காண்கிறான். சித்தஸ்வா தீனம் இழந்திருந்தவனுக்கு அவளைக் காண்ப திலேயே மனம் சுயநிலைக்குத் திரும்புகிறது. இப்படிக் கதையின் அடிப்படைக் கருத்தே மணலில் எழுப்பும் வீடுபோல பலவீனமாயிருக் கிறது. சித்தஸ்வாதீனம் இழந்தவன் மனம் திடமடையும் போது திரைக்கதையில், சந்தே கம், குழப்பம், வேதனை எல்லாம் வந்து சேர்ந்து விடுகின்றன.

கே. எஸ். கோபால் கிருஷ்ணன் கதை என்றால் அதற்கென்று சில ஃபார்முலாக்கள் உண்டு. அதுமட்டும் அல்ல; வசனங்களைக் கொட்டித் தீர்த்திருப்பார். இந்தப்படம் விதி விலக்கல்ல.

ஸ்ரீப்ரியாவின் அடக்கமும், பதவிசும் ஜய லட்சுமியின் துள்ளலோடு சேரும் போது சபாஷ் போட வைக்கின்றன.

முத்துராமன் விஜயகுமார் சுருமாரி எல்லா ரும் நன்றாய் நடித்திருந்தாலும், படம் 'போர்' அடிக்கிறதே!

இடைவேளைக்குப் பிறகு திரைக்கதை நத்தை வேகத்தில் நகரத் தொடங்குகிறது. கடைசியில், மனைவியை இழந்த நண்பன், தன் நண்பனின் நல்வாழ்வுக்காக உயிர் துறப்ப தாகப் பழைய கால நாடக பாணியில் படம் முடிகிறது. திரைக்கதையை நீட்டி,வளர்த்து, திருவாரூர்த் தேரை நிலைக்குக் கொண்டுவந்து நிறுத்துகிற மாதிரி முடிப்பது கே. எஸ். கோபாலகிருஷ்ணனுக்குக் கைவந்த கலை.

—காந்தன்

# புண்ணியம் செய்தவள்





# அன்றும் இன்றும்



நேற்று நிறுவப்பட்டது ஜோதி யூனிபில்ட் பம்பு



இன்றே காணமுடிந்தது இன்ப நாள் இதனை

முன்னேற்றத்தின் இரகசியம்—

## ஜோதி யூனிபில்ட் பம்பு

வெற்றி மிகு ஜோடி



ஜோதி
யூனிபில்ட்
பம்பு



ஜோதி
ஸ்டார்ட்டர்

ஆழ ஈர்ப்பு (டீப் ஸக்ஷன்) மூலம் செவ்வனே நீரிறைக்கும் திறன், அன்றாடப் பழுதுபார்ப்புத் தொல்லைக்குத் தீர்வு, மின்சாரச் செலவுகளிலே மிச்சம், நீடித்த ஆயுள்—இவை யாவும் ஜோதி யூனிபில்ட் பம்புகளிலே கிடைக்கும் முக்கிய நன்மைகள். இக் காரணத்தினால் தான் ஜோதி பம்பு காப்பியடிக்கப் படுகிறது. ஜோதி ஆராய்ச்சி நிலையத்தின் ஓயாத முயற்சிகளின் பயனாக, எப்போதுமே விவசாயிகள் இந்தப் பம்பையே கோருகின்றனர்.



## ஜோதி லிமிடெட், பரோடா

ஹைட்ராலிக்ஸ் • எலக்ட்ரிகல்ஸ் • பவர் எலக்ட்ரானிக்ஸ்

av-rest/24r2/JY-tm

கிளை: எய்ர்லைன்ஸ் ஓட்டல், 177/179 மவுண்ட் ரோடு, சென்னை. போன்: 850 07.
விற்பனையாளர்கள்: வி. வி. & கோ., xxx/613, மகாத்மா காந்தி ரோடு, கொச்சி 682 016.
ஆட்டொமேட்டிக் பம்ப் ஸ்பெஷலிஸ்ட்ஸ், நம்பர் 4, பாண்டி பஜார், தி. நகர், சென்னை 600 017;
ஜயலட்சுமி டிரேடர்ஸ், நம்பர் 2, எர்ரபாலு செட்டி ஸ்ட்ரீட், சென்னை 600 001; ராஜம் & கோ.,
61, சதி ரோடு, ஈரோடு; மேலக்கடை எலக்ட்ரிகல்ஸ், 215, மெயின் ரோடு,
பெண்ணாடம் 606 105; ஆகட் ஏஜன்ஸிஸ், நம்பர் 8, நியூ கொழும்பு ஸ்டோர்ஸ், மாயூரம்;
:.பெர்மியர் இண்டஸ்ட்ரீஸ், 80/81, செம்புதாஸ் ஸ்ட்ரீட், சென்னை 600 001;
முருகன் ஆட்டொமேட்டிக்ஸ், காளியம்மன் கோயில் ஸ்ட்ரீட், உசிலம்பட்டி.

# அவங்க பார்த்துப்பாங்க

## காட்சி 17

(ஏழுமலை நாயுடு வீடு. சிவராமன் கையில் ஒரு ரிவால்வருடன் வருகிறான். சுற்றுமுற்றும் பார்க்கிறான். நித்யா அவன் கையைப் பற்றுகிறாள்.)

நித்யா: அண்ணா! என்ன இது?

சிவரா: சட்டத்திலுள் தீர்க்க முடியாத ஒரு விஷயத்துக்கு நான் முடிவு கட்டத் துணிஞ்சிட்டேன்.

நித்யா: ஓ. அந்த அயோக்கியர்களைத் தேடி திருத்தணிக்குப் போகிறாயா?

சிவரா: ஆமா. கல்யாணிக்கு நீதி தேடித் தர நான் எடுத்துக் கொள்ளும் கடைசி முயற்சி இது. வெறியாட்டத்துக்கு மூடு விழாக் கொண்டாட நான் ஏத்துக்கிட்டிருக்கிற புனிதப் பயணம் இது.

நித்யா: அதாவது அந்த மூணு பேரையும் தேடிப் போய் சுட்டுத் தள்ளப் போறே. இல்லையா? இப்படிச் செய்ய உனக்கு என்ன உரிமை இருக்கு?

சிவரா: ஏன் உரிமை இல்லே?

நித்யா: இது சட்டத்துக்குப் புறம்பான விஷயம். இதைச் செய்ய நமக்கு உரிமை இல்லே.

சிவரா: சட்டத்துக்குப் புறம்பான விஷயம் தான். ஆனா நியாயத்துக்குப் புறம்பான விஷயம் இல்லே. அதுவும் இந்தக் குண்டு பாயப் போவது நாட்டின் சட்டத்தை மதிச்சு நடக்கிற நல்ல மனுஷங்க மேலே இல்லே! சட்டத்தைக் கால்லே போட்டு நசுக்கிக்கிட்டு வெறியாட்டம் போடற மனிதப் பதர்கள் மீது!

நித்யா: நிச்சயமா நான் இந்தக் காரியத்தைச் செய்ய அனுமதிக்க மாட்டேன். ஓர் உண்மையான பத்திரிகையாளன் வெறி உணர்ச்சியிலே கொலைகாரனு மாறுவதை நான் அனுமதிக்க மாட்டேன்.

சிவரா: நித்யா! இதைத் தவிர எனக்கு வேறே வழியே இல்லே. இதனாலே நான் அழிஞ்சு போவேன்னு எனக்கு நல்லாத் தெரியும். ஆனா மூன்று கொடிய மிருகங்களை வாழவிடக் கூடாது! நாட்டைக் காப்பாத்தறதுக்காகப் போர்க் களத்திலே மடியறதை நீ வீரம்னு நெனச்சா, சமுதாய ஒழுக்கத்தைக் காக்க நானும் தூக்கு மேடைக்குப் போவது ஒரு விதத்திலே வீரம் தான். என்னைத் தடுக்காதே!

(காட்சி மாற, மாடிப் படியில் ஏழுமலை நாயுடு கையில் அரிவாளுடன் நிற்கிறார். ரங்கநாயகி அவர் கையைப் பற்றிக் கொண்டு நிற்கிறாள்.)

கோமல் சுவாமிநாதன்



ரங்க: யப்பா... யப்பா... என்னப்பா! அரிவாளைத் தூக்கிக்கிட்டு நிற்கிறே!

ஏழுமலை: சும்மா இருடி. இட்டேரி முத்துவுக்கே நானு மண்ணு காட்டினவன். மூணு சோதாப் பசங்க ஒரு நல்ல பொண்ணோடே விளையாடிட்டு அதைப் பார்த்த சாட்சியையும் தீர்த்துட்டானுக. நானும் சும்மா இருக்கிறதா? அவங்க மூணு பேர் தலையையும் வெட்டிக் கொண்டு வந்து அந்தக் கல்யாணியின் காலில போடப் போறேன்.

ரங்க: அய்யய்யோ! அது மகா பாவம்பா. இதுவரைக்கும் நாம பாவம் பண்ணவேயில்லேப்பா. சாமி கிட்ட விட்டுடுப்பா. அவன் பார்த்துப்பான்:

ஏழு: அந்தச் சாமிதான் என் கனவுலவந்து சொல்லிச்சு. 'அடே ஏழுமலை! எனக்கு வேலை ஜாஸ்தியா இருக்கு. இந்த மூணு பசங்களை நீ பார்த்துக்க. நீதான்டா எனக்கு ஐயனார் சாமி. அவனுகளைக் கூறு

''அவுங்க வாழ்வை மட்டும் அழிக்க நீங்க போகல்லே, இப்படிச் செல்வதன் மூலம் என் வாழ்வையும் அழிக்கப் போறீங்க.''

''நாட்டைக் காப்பாத்தறதுக்காகப் போர்க்களத்திலே மடியறதை நீ வீரம்னு நெனைச்சா, சமுதாய ஒழுக்கத்தைக் காக்க நானும் தூக்கு மேடைக்குப் போவது ஒரு விதத்தில வீரம்தான்.''

போடுற பொறுப்பை உங்கிட்ட விட்டுட றேன்'னு சொன்னருடி.
ரங்க: சாமியா சொல்லிச்சு?
ஏழு: ஆமாடி!
ரங்க: என் கனவுலகூட அம்பிகை வந்து, 'அடி ரங்க நாயகி! உன் புருஷன் ஏடா கூடமா அரிவாளைத் தூக்கிக்கிட்டுக் கிளம் புவான். அவனைத் தடுத்து நிறுத்துடி'ன்னு சொல்லிச்சிப்பா.
ஏழு: பொய் சொல்லாதே!
ரங்க: பொய் இல்லேப்பா. நெசந்தாப்பா. மவராசா, வேணாம்பா; விட்டுடு.
ஏழு: சும்மா இரு. ஆறிலேயும் சாவு நூறி லேயும் சாவு! உன் புருஷன் ஒரு நல்ல காரியம் செய்யப் போறான். அவனுக்கு விபூதி குங்குமம் இட்டு அனுப்பு. அடே பசங்களா, பாலாபிஷேகமா பண்றீங்க? புறப்பட்டுட்டாண்டா ஏழுமலை. உங்களைப் பலி போட.

(காட்சி மாறி, ஆனந்த் ஆத்திரத் துடன் வருகிறான்.)

ஆனந்த்: ஏய் பி.எஸ்.ஸி. பஸ்ட் இயர்... இங்கே வா.
கல்யாணி: என்னங்க?
ஆனந்த்: சட்டமும் நீதியும் பிடிக்க முடி யாத எல்லையில் அந்த மூணு பேர் இருக் காங்க. ஆனா இந்த ஆனந்தன் பிடியி லிருந்து அவங்க தப்ப மாட்டாங்க.
கல்யா: நீங்க என்ன சொல்றீங்க?
ஆனந்த்: அந்த மூணு பேரையும் கோழிக் குஞ்சு இருக்கற மாதிரி திருகிப் போடத் திருத்தணிக்குப் போறேன்.
கல்யா: அவங்க வாழ்வை மட்டும் அழிக்க நீங்க போகல்லே. இப்படிச் செய்வதன் மூலம் என் வாழ்வையும் அழிக்கப் போறீங்க.
ஆனந்த்: எப்படி?
கல்யா: உங்க மனைவியா காலமெல்லாம் வாழப் போறோம்கிற நம்பிக்கை துளிர் விட்டிருக்கு. அதை நீங்களே கிள்ளி எறியறீங்க.
ஆனந்த்: இதை நான் செய்யாதிருந்தா உனக்கு வாழ்வு கிடைக்கும். இதை நான் செய்து முடிச்சா பல பெண்களுக்கு வாழ்வு கிடைக்கும். எது மேல்? நீயே சொல்லு.

(கல்யாணி மௌனம்)

## காட்சி 18

(ஏழுமலை வீடு. 'சர்மா சார்!' சர்மா சார்!' என்று கூப்பிட்டுக் கொண்டு நித்யா, கல்யாணி, தீபா, ரங்க நாயகி முதலியோர் வருகிறார்கள்.)

சர்மா: எதுக்காக எல்லோரும் என்னைத் தேடிண்டு வந்திருக்கேள்? என்ன விஷயம்?
நித்யா: சர்மாஜி! பிரசாத்தையும் அவன் கூட்டாளிகளையும் பழிவாங்கச் சிவராமன்






ரிவால்வரோட கிளம்பிப் போயிட்டான் சார்.

சர்மா: அடப் பாவி! தெய்வ நியாயத்துக்குக் காத்திருக்க அவனுக்கு பொறுமை இல்லியே!

கல்யா: மாமா, ஆனந்தனும் அதே காரியத்துக்காகப் புறப்பட்டுப் போயிருக்கார்.

சர்மா: ஆனந்துமா! அவனுமா நீதியைத் தன் கையில எடுத்துக்கத் தீர்மானிச்சுட்டான்? அவனைப் பெத்ததுக்காக வெட்கப்படும்படியான நிலையை அவன் உருவாக்கி விட்டானே!

ரங்க: சாமி, அவுங்களாவது சின்னப் பையனுக. இந்தக் கிழவனுருக்கு என்ன வந்தது. அரிவாளோட கிளம்பிட்டாரே!

சர்மா: காட்டுமிராண்டிக் கூட்டமா நாம மாறிட்டமா? நிதானமாகக் கிடைச்சாலும் நிச்சயமாக் கிடைக்கக் கூடிய தெய்வ நீதியை அலட்சியப்படுத்திவிட்டு ஆயுதத்தைக் கையிலெடுத்திட்டாங்களே. இப்ப அவங்கள்ளாம் எங்கே போயிருப்பாங்க?

தீபா: திருத்தணிக்குப் போயிருக்காங்க. அவுங்க வழக்கமாக் கூடற 'பிக்னிக் ஸ்பாட்' எனக்குத் தெரியும். வாங்க சார், போகலாம்.

சர்மா: எப்படியாவது இந்தப் படுகொலை நடக்காமத் தடுத்துடணும்மா. என் அப்பா முருகா! எல்லாத்தையும் நல்லபடியா நீ தான் அப்பா பார்த்துக்கணும். வாங்கோ, வாங்கோ.

(எல்லோரும் போகிறார்கள்.)

(தொடரும்)



டெட்ககன் என்ற ஜப்பானிய புத்த பிட்க சீன மொழியில் இருக்கும் புத்த நூல்களை, ஜப்பானிய மொழியில் மொழி பெயர்த்துவெளியிடப் பணம் திரட்டினார். நிறையப் பணம் சேர்ந்தது. பத்து ஆண்டுகள் கழிந்தன. புத்தகம் வெளியிட ஆயத்தம் ஆரம்பிக்கும் போது நாட்டில் பெரிய பஞ்சம் வந்தது. அவ்வளவு பணத்தையும் மக்கள் பசியைப் போக்க டெட்ககன் செலவிட்டு விட்டார். பஞ்சம் நீங்கி மக்கள் சுபிட்சமாக வாழ ஆரம்பித்ததும் திரும்பவும் புத்தகத்துக்கு பணம் சேர்த்தார். திரும்பவும் முன்னைவிட அதிகமாகப் பணம் சேர்ந்தது. புத்தக வேலை ஆரம்பிக்கும் சமயம் நாட்டில் பெரிய தொத்து நோய் வந்தது. சேர்ந்த பணத்தை நோய்த் தடுப்புக்குச் செலவிட்டார். நோய் நீங்கி மக்கள் குணமடைந்த பிறகு திரும்பவும் பணம் சேர்க்கத் தொடங்கினார். அந்த மூன்றுவது தடவை சேர்ந்த பணத்தில் புத்தகத்தைவெளியிட்டார். மகிழ்ச்சியோடு இறந்தார். ஆனால் நேரில் பார்த்த இந்த மூன்றுவது பதிப்பைவிட கண்ணால் பார்க்காத முதல் இரண்டு பதிப்புக்கள்தான் மக்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுத்ததாக விஷயம் தெரிந்தவர்கள் சொல்லுவார்கள்!

— ஜென் புத்திசம் - குட்டிக் கதை: கே. ஆர்.

# மகளிர் பகுதி





## அரசனும் சிற்பியும்!

குடிமக்களால் 'கஞ்சன்' என்று வர்ணிக்கப்பட்ட ஓர் அரசனுக்கு அழகான ஒரு மகள் இருந்தாள். ஆனால் அவள் ஓர் ஊமை. திடீரென்று அவள் செத்துப் போனாள்.

ஊமை மகள் மீது உயிரையே வைத்திருந்த அரசன், அவளுக்குத் தன் நாட்டின் நகர மையத்தில் ஒரு சிலை வைக்க நினைத்தான். ''தன் மகளைப் போலவே சிலை செய்ய ஒரு திறமை மிக்க சிற்பி தேவை'' என்று விளம்பரம் செய்தான்.

சிலை எந்த அளவுக்குத் தன் மகளை ஒத்து இருக்கிறதோ, அந்த அளவுக்கு சிற்பிக்கு விசேஷப் பரிசு வழங்குவதாகவும் அரசன் உறுதியளித்தான்.

இதனைக் கண்டு ஒரு சிற்பி அரசனிடம் வந்தான். சிலை தயாராயிற்று! லட்சக்கணக்கான மக்கள் முன்னிலையில், சிலையைத் திறந்து வைக்க அரசன் மேடைக்கு வந்தான். ''இளவரசியை உயிரோடு கொண்டு வந்து நிறுத்தி இருப்பது போல் இருக்கிறது, சிலை!'' என்று பொது மக்கள் பரவலாகப் பேசிக் கொண்டதை அரசன் கவனித்தான். சிலை, அரசனையும் கவர்ந்தது.

அரசனுக்கு ஓர் அச்சம்! சிலையை முழு மனத்துடன் பாராட்டி விட்டால், சிற்பிக்கு அதிகச் செலவில் விசேஷப் பரிசு கொடுக்க நேர்ந்து விடுமோ என்று கலங்கினான். கஞ்சப் பிரபு அல்லவா! எனவே சிலையைப் பற்றி ஏதாவது குறை சொல்ல வேண்டும் என்று முடிவு செய்தான்.

''சிலை நன்றாகத்தான் இருக்கிறது... ஆனால் சிலையில் உயிரோட்டம் இல்லையே!'' என்றான்.

உடனே சிற்பி, ''நன்றாகப் பாருங்கள், அரசே! இளவரசியாரே உயிரோடு வந்து நிற்பது போல் தான் சிலை வடித்திருக்கிறேன்'' என்று மறுத்துரைத்தான்.

அவன் பேசியதில் பெரிய பிடி கிடைத்து விட்டதாக அரசனுக்கு எண்ணம். அவன் பெரிதாகச் சிரித்தான். பிறகு ஏளனமாகக் கேட்டான்:

''சிற்பியே! என் மகளை 'உயிரோடு' வந்து நிற்பது போல் இருக்கிறது என்று பெருமையடித்துக் கொள்கிறாயே, அப்படியானால் அந்தச் சிலை என்னைப் பார்த்து 'அப்பா' என்று அழைக்குமா?''

சிற்பி மிகவும் அமைதியோடு பதில் சொன்னான்:

''அரசே! நான் செய்து இருப்பது உங்கள் மகளின் சிலைதான். உங்கள் மகளோ ஓர் ஊமை! ஊமை பேசுமா? பிறகு, அவரைப் போலவே செய்யப்பட்ட சிலை மட்டும் எப்படிப் பேசும்?''

அரசனின் முகம் கறுத்தது.

—எம். ரசிதா

பிளாஸ்டிக் கூடைகள் பிய்ந்த பின் அதைத் தூக்கி எறிந்து விடாதீர்கள். 'ட்ரே' மாதிரி உள்ள அதன் அடிப்பாகத்தை வெட்டி எடுத்து அதில் எண்ணெய் பாத்திரங்களையும், பாட்டில்களையும் வைத்துக் கொள்ளலாம். எண்ணெய் வெளியே போகாது. அழுக்கேறிய பின் அதைச் சோப்புத் தண்ணீரில் ஊற வைத்துக் கழுவி விடலாம்.

-எஸ். மாலதி





மகளிருக்கு மலர்களால் மங்கலமும் விளக்கமும் கவர்ச்சியும் கிடைக்கின்றன. அதனால் மலர்களை வளர்க்கும் பொறுப்பு வடமொழி நூல்களிலும் தமிழ் நூல்களிலும் பெண்களுக்கே என்ற செய்தி மிகுதியாகக் காணப்படுகிறது. வடமொழியில் ஆண்பால் பெண்பால், சொற்களுக்கே அன்றி உயிர்களுக்கல்ல. மலர் என்ற சொல் அம்மொழியில் பெண்பால், தமிழிலோ அது ஒன்றன் பால். பெயர் பெண்பாலாயிருத்தலினால் மகளிர் மலர்களின் பெயர்களைத் தமக்குச் சூட்டிக் கொள்கின்றார்கள். அல்லி, கமலம், பத்மா, புஷ்பா, சண்பகம், மாதவி, பாரிஜாதம் என்னும் பெயர்களையுடைய நங்கையர் பலர். வீட்டுத் தோட்ட அமைப்பில் பெண்களின் பங்கே முதலிடம் பெற்றுள்ளது.

சகுந்தலை கண்வரின் ஆச்சிரமத்தில் மலர்ச் செடிகளை வளர்த்த செய்தியை காளிதாசர் அழகாக வர்ணிக்கிறார். மலர்ச் செடிகளை வளர்த்த மகளிர் தாம் வளர்த்த செடி முதல் மலர் ஈன்ற போது அதற்கு விழாவும் கொண்



# யோசனை!

போர்ன்விட்டா, ஓவல்டின், அமுல் போன்ற டப்பாக்களில் மேல் மூடிக்குக் கீழே இருக்கும் மெல்லிய தகரத்தை அழகாக வட்டமாகக் கத்தரித்து எடுத்து வைத்துக் கொள்ளுங்கள். படத்தில் உள்ளது போல் சுற்றிலும் (சுமார் ஒரு சென்டிமீட்டர் நீளம்) வெட்டி மேல் நோக்கி மடக்கி விட்டால் ஒரு அகன்ற பாத்திரத்தைப் போன்று ஆகும். நடுவே உங்களுக்குப் பிடித்த டிஸைனை (மயில், மான், போன்ற படங்கள்; தாமரை போன்ற பூக்கள்; 'நல்வரவு' 'ஸ்ரீராம ஜெயம்' போன்ற எழுத்துக்கள்) குண்டூசி முனையால் கோட்டுச் சித்திரங்களாய் வரைந்து கோட்டின் மீதே நெருக்கமாய் குண்டூசி முனையாலேயே துளையிடுங்கள். இதில் இப்போது கோலப் பொடியைக் கால் சென்டி மீட்டர் உயரம் நிரப்பிக் கொண்டு தரையிலோ பலகையிலோ வைத்து எடுத்தால் அழகான கோலச் சித்திரம் கிடைக்கும். பெரிய கோலங்களுக்கு பார்டராகவும் போடலாம். ஒவ்வொரு டிசைன் தட்டில் ஒவ்வொரு கலர்ப்பொடியை நிரப்பிக் கொண்டு வீட்டையே வண்ண ஓவியமாய் அலங்கரித்து விடலாம்.

-விஜயலக்ஷ்மி ஜெயராமன்




# மலரும் மங்கையும்

டாடினர். பெண்ணொருத்தி பாலும் தேனும் வார்த்து ஒரு புன்னை மரத்தை வளர்த்த செய்தி எட்டுத்தொகை நூல் ஒன்றில் காணப்படுகிறது. மலர்ச் செடிகளை அல்லாமல் பயிர் வளர்ப்பும் நாற்று நடுதலும் களையெடுத்தலும் மகளிரின் தொழிலாகவே தமிழ்நூல்கள் கூறுகின்றன. பெண்கள் மலரை அணியும் வழக்கம் தமிழ் நாட்டைச் சேர்ந்தது. இங்கிருந்தே அது வேறு நாடுகளுக்கும் பரவியது.

பெண்களுக்கு எட்டாத உயரத்தில் மரக் கொம்பிலிருந்த மலர்களைக் காளைப் பருவத்து ஆடவர் அம்மகளிருக்குப் பறித்துக் கொடுத்து அச்செயல் வாயிலாக அவர்களை மணந்ததுண்டு. இச் செய்தியை இலக்கண நூல்கள் 'பூத்தரு புணர்ச்சி' என்று குறிக்கின்றன. முதல் முறை கருவுற்ற மாதருக்கு ஒரு நன்னாளில் மங்கல மகளிர் பூச்சூட்டுவது ஒரு விழாவாகத் தென்னாட்டில்கொண்டாடப்படுகிறது. பூஞ்சோலைகளில் மலர்களைப் பறித்தல் மகளிருக்கு ஒரு விளையாட்டுப் பொழுது போக்கு எனக் காவியங்கள் வருணிக்கின்றன. ஒருத்தி ஒரு செடியிலிருந்த எல்லா மலர்களையும் பறித்து விட்டாள். செடி தன் அழகையும் பொலிவையும் இழந்து விட்டமைக்கு அவள் வருந்தினாள். பிறகு ஓர் எண்ணம் தோன்றவே அவள் தன் அணிகளைக் கழற்றி அந்தச்செடிக்கு அணிவித்து. புதிதாக அதனிடம் காணப்பட்ட அழகினில் தன்னை மறந்தாள்.

மகளிரின் ஒவ்வோர் உறுப்புக்கும் ஒவ்வொரு வகை மலர் உவமையாகும். தங்கள் அவயவங்களுக்கு நிகராக இருப்பதை விரும்பாமல் மகளிர் மலர்களைப் பறித்தெறிந்தனர். என்றும் காவியங்கள் வருணித்ததுண்டு. 'ஆராமந் தொறும் தங்கள் அவயவம் போன்ற கொய்தார் அணங்கு போன்றார்' என்பது வில்லிபாரதத்துள் உள்ளது. இயல்பில் மலராத பருவத்தே மரங்கள் மகளிரின் சில செயல்களால் மலர்வதுண்டு என்பதையும், இன்ன இன்ன மரம் மகளிரின் இன்ன இன்ன செயல்களால் மலரும் என்றும், வடமொழியிலும் தமிழிலும் உள்ள பல நூல்கள் குறிக்கின்றன.

–லலிதா ஜானகிராமன்






வீடு கட்டுகிறவன் தன் தேவைகளுக்கு ஏற்றபடி அதை அமைக்க என்ஜினியரிடம் செல்லுகிறான். என்ஜினியர் ப்ளான் போட்டுக் காட்டுகிறார்.

தனஞ்சயன் எனும் வணிகனால், கடம்பவனக் காட்டில் கண்டுபிடிக்கப்பட்ட சிவலிங்கத்துக்கு ஆலயம் கட்டக் குலசேகர பாண்டியன் ஆயத்தம் செய்தபோது –

அதை சோமசுந்தரப் பெருமான் பார்த்துக் கொண்டு நிற்கவில்லை. தாமே ஒரு சித்தராகத் தோன்றி, சிற்ப நூல் விதிப்படி ஆலயமும் நகரமும் எவ்வாறு இருக்க வேண்டும் என்று விதித்து விட்டு மறைந்தார்.

— புராண வரலாறு

## 8

ராபர்ட் ஃபிட்ஜெரால்ட் கான்வே என்ற பெயர் கொண்ட ஒரு மேனாட்டுக்காரன் கடந்த பல மாதங்களாகப் பாண்டியன் ஒட்டலில் தங்கி வருகிறான் என்றும், அவனைப் பார்க்க, குறைந்தது வாரத்துக்கு ஒரு தடவையாவது லாவண்யா செல்லுகிறாள் என்றும் ரமணிக்கு ஏற்கெனவே தெரியும். அவனுடைய அசட்டு மனத்தில், ஒரு சாதாரண காதலனுக்கு நியாயமாக எழவேண்டிய பொறாமை, ஆத்திரம், ஏமாற்றம், துக்கம் போன்ற உணர்ச்சிகள் எழவில்லை. அவனைப் பொறுத்த வரையில் லாவண்யா ஒரு காற்று. எல்லாரிடமும் பேசுவாள்; ஆனால் யாரிடமும் தன் மனத்தைப் பறிகொடுத்துவிட மாட்டாள். கான்வே எத்தனையோ படித்த மேனாட்டு முட்டாள்களில் ஒருவன். இந்து மதத்தை அரை குறையாகப் புரிந்து கொண்டு குதிக்கிறவன்; எந்தக் கற்சிலை, உலோகச் சிலையைக் கண்டாலும் 'ஆகா' 'ஹாஹா' என்று கோஷமிடுகிறவன். அவனால் ஒரு நாளும் லாவண்யாவை ரமணியிடமிருந்து பறித்துக் கொள்ள முடியாது.

அன்று சாயங்காலம் சாவித்திரி அவசர அவசரமாக லேடீஸ் க்ளப்புக்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கையில் ரமணி அவளிடம் வந்தான்.

''அம்மா!''

''நான் அவசரமாகப் புறப்பட்டிண்டிருக்கேன்.''

''தெரியும்.''

''அப்ப என்ன வேணும், சீக்கிரம் சொல்லு.''

''லாவண்யா...'' ரமணி இழுத்தான்.

''என் ஹாண்ட் பேக்கிலே லாவண்யா இல்லே...''

''இன்னிக்கு நான் அவளைப் பார்க்கப் போறேன்.''

''தட்டு நிறைய வெற்றிலை பாக்கு, தேங்காய் பழம், ஒரு ரவிக்கைத் துண்டு எல்லாம் எடுத்துண்டு போ... அவ நமஸ்காரம் பண்ணுவாள். நீ பல்லே இளி.''

ரமணி சிரித்தான். அவனுக்கு என்னமோ கோபம் என்னும் உணர்ச்சியே கிடையாது. அதுவும் அம்மாவிடம் பேசும்போது.

''அதை இன்னொரு நாள் செய்கிறேன், அம்மா... பலராமனுக்கு என்ன செய்யப் போறே...''

''இன்னும் முடிவு எடுக்கலே.''

''வைத்தியத்துக்கு மட்டும் ஏற்பாடு செய். மத்ததெல்லாம் நான் பார்த்துக்கறேன்.''

''கலியாணம் ஆறத்துக்கு முன்னாலேயே மாமனாரைப் பத்தி ராவும் பகலுமா நினைச்சு நினைச்சு மாய்ஞ்சு போறவன் நீ ஒருத்தன் தாண்டா, ரமணி!''

''அவர் மாய்ஞ்சு போனப்புறம் நெனைச்சு அழறதிலே என்ன புண்ணியம் அம்மா?''

''சரி, நான் வைத்தியத்துக்கு ஏற்பாடு செய்துடறேன்னு வைச்சுக்கோ. போக வரப் பிளேன் செலவுக்கு என்ன செய்வே?''

''லாவண்யா கொஞ்சம் பணம் சேர்த்து வைத்திருக்கிறாள். பலராமனுடைய ஒட்டல் முதலாளி கொஞ்சம் தருகிறார். நான் என் வக்கீல் வரும்படியிலேருந்து கொஞ்சம் கொடுப்பேன்... இப்படிக் கொஞ்சம் கொஞ்சமாச் சேர்த்துப் பிளேனிலே ஏத்தி அனுப்பிடுவேன்.''

''பலராமன் நியூயார்க் ஏர்போர்ட்டிலேயே துண்டை விரிச்சுப் படுத்துப்பாராக்கும்! அங்கே தங்கறதுக்கு என்ன ஏற்பாடு? அதுக்கு டாலர் டாலராக் கொட்டணுமே?''

''அதுக்கும் ஒரு வழி வச்சிருக்கேன்...''

''ஏன் நிறுத்தறே... நான் என்ன வழின்னு கேட்டப்புறம்தான் சொல்லுவியா?''

''இல்லேம்மா, உனக்கு இப்போ லேடீஸ் க்ளப்புக்கு டயமாயிடுத்து... பங்க்சுவாலிட்டி

உன் கூடப் பிறக்கலேன்னாலும், நீ அதனோடு பழகியவன். நான் விவரங்களை அப்புறமாச் சொல்றேன்...''

''சரி, நான் வரேன்.... ஹலோ... சொல்ல மறந்துட்டேன். அரை மணி நேரம் முன்னாலே ஹரிணி போன் பண்ணினா.''

''என்ன சொன்னா?''

''நீ வெளியே போயிருக்கேன்னேன்.''

''நான் பக்கத்துத் தெருவுக்குத்தானே போயிருந்தேன்? ஆமாம், அவ என்ன சொன்னா?''

''நீ வந்தவுடனேபோன் பண்ணணுமாம்.''

''எம்மேலே உனக்கு கொஞ்சம் கூட இரக்கம், அனுதாபம், கருணை, கரிசனம் ஒண்ணும் இல்லேம்மா.''

''ஏண்டா!''

''இருந்திருந்தா இப்பச் சொல்லுவியா?''

''ஏதோ மறந்துட்டேன்.''

''கிளப்பிலேருந்து திரும்பி வந்தப்புறம் சொல்றது. இப்ப நான் ஹரிணிக்குப் போன் பண்ணினா, உடனே டிரெஸ் பண்ணிண்டு ரெடியா இருக்கச் சொல்லுவா. வெளியே போகலாம்பா...''

''அதுக்கென்ன, நீ இப்ப வந்தாகிவிட்டதுன்னு அவளுக்குத் தெரியவா போகிறது? நீ போன் பண்ணாதே!''

''எனக்குப் பொய்யும் புனைசுருட்டும் அவ்வளவு சுலபமா வரஇல்லே.''

''இது பொய்யில்லே. சாதுரியம், டாக்ட்.''

சாவித்திரி புறப்பட்டுச் சென்றதும் ரமணி தன் ஸீனியர் ராமையா வீட்டுக்குப் போன் பண்ணினான். ஹரிணி வீட்டில் இல்லை என்ற தகவல் வந்தது. ஒரு பெரிய நிம்மதிப் பெருமூச்சு அவனிடமிருந்து புறப்பட்டுக்கொண்டிருக்கையில் திடீரென்று வாசலில் கார் நிற்கும் சத்தம் கேட்டது.

வெளியே வந்து கொண்டிருந்த 'நிம்மதி'யை மனத்தில் குழி தோண்டிப் புதைத்து விட்டு ஹாலுக்கு வந்தான்.

ஹரிணி உள்ளே வந்து கொண்டிருந்தாள்.

''ஹாய் ரமணி... என்ன வீட்டிலே இருந்துண்டே இல்லேன்னு ரீல் விடறேளா?''

''வா ஹரிணி... நான் இப்பத்தான் உனக்குப் போன் பண்ணினேன். உன் அம்மா தான் பதில் சொன்னாள்.''

''நிஜமாவா?''

''கேளேன்.. போனை வைச்ச சூடு இன்னும் ஆறவில்லே.''

''ஓகே, ஓகே... சீக்கிரம் டிரஸ் பண்ணிக்குங்க. மணி அஞ்சரை ஆயிடுத்து.''

''எங்கே போறோம்?''

''ரீகலுக்கு... ஒரு நியூ பிக்சர்.''

''ஸாரி, ஹரிணி. அப்பா ஒரு அஃபிடவிட் தயார் பண்ணச் சொல்லியிருக்கார்... க்ளு மொட்டையை அவசரமா ஒரு காரியமா அனுப்பியிருக்கேன்.... இன்னிக்கு வேண்டாம்.''

''எனக்கு போர் அடிக்கிறது ரமணி.''

''என்னை என்ன செய்யச் சொல்றே?''

''ஐ வாண்ட் யுவர் கம்பெனி.''

''எனக்கு போர் அடிக்கும்.''

ஹரிணி கலகலவென்று சிரித்தாள். அவளுடைய பற்களின் முத்துக் கோர்வை பளிச்சிட்டது. உதடுகளில் அவள் லேசாகப் பூசியிருந்த இளம் சிவப்புப் பூச்சு கண்ணுக்கு ரம்யமாக இருந்தது. இந்த அழகுகளை ரமணி ரசித்தானே தவிர அவன் ரசனையில் லயித்துப்போய்விடவில்லை.

''ஏன் சிரிக்கிறே, ஹரிணி?''

''நீங்களும் விட் அடிக்க ட்ரை பண்றேள்... எனக்கு போர் அடிக்கிறதுன்னு இங்கே வந்தேன். ஆனா என்னாலே போர் அடிக்கும்னு நீங்க சொல்றேள்.''

''எனக்கு பொய் சொல்ல வரலையே!''

''ஓகே... போர் அடிக்காம ஒரு விஷயத்தை இன்னிக்கே உங்க கிட்டே சொல்லிடறேன். நாளைக்குத்தான் சொல்றதா நினைச்சிருந்தேன். சினிமாவுக்கோ போகலே... இப்பவே சொல்லிடறேன்.''

''என்ன விஷயம்? அதுவும் முக்கியமான விஷயம்?''





**பட்டால் குற்றம்!**

ஒரு பெண் பாட்மிண்டன் ஆடிக் கொண்டிருக்கும் போது அவளுடைய புடவைத் தலைப்பு 'நெட்' மீது பட்டுவிட்டால் கூட அது குற்றம் தான்!

'ஸ்போர்ட்ஸ் வீக்' - 'ஸரோ'

''என்னோட அம்மாவும் அப்பாவும் நம்மோட சங்கல்பத்தை முறியடிக்கறதுன்னு கிளம்பியாச்சு.''

''எனக்குப் புரியலே!''

''நீங்களும் நானும் என்ன சங்கல்பம் செய்து கொண்டோம்? அதுவாவது நினைவிருக்கா?''

''ஹூஹூம்.''

''ஃப்ரெண்ட்ஸாலே பழகறது., லவர்ஸா இருக்கிறதில்லேன்னு.''

''ஆமாம்.''

''இப்ப அப்பாவும் அம்மாவும்...''

ரமணி இடைமறித்தான்.

''அவர்கள் இப்போ நம்மை லவர்ஸா மாத்த ட்ரை பண்றாளா? அது எப்படி முடியும்?''

''ஃப்ரெண்ட்ஷிப்பும் கூடாதாம்; லவ்வும் கூடாதாம்.''

''உங்க அம்மா அப்பா புத்திசாலிகள்.''

''நீங்க ஹஸ்பண்டா இருக்கணுமாம். நான் ஒய்ஃபா இருக்கணுமாம்.''

''ஐ வித்ட்ரா மை ரிமார்க்ஸ். உங்க அம்மா அப்பா புத்திசாலிகள் இல்லே.''

''இப்ப என்ன செய்யப் போகிறீர்கள்?''

''அவர்களுக்குப் புத்தி வர வழி பண்ணப் போறேன்.''

''நோ யூஸ்... உங்க அம்மாவும் இதுக்கு உடந்தை.''

''என்ன சொல்றே?''

''அப்ப உங்க அம்மா ஒண்ணுமே சொல்லலியா?''

''உன்னை நான் கல்யாணம் பண்ணிக்கணும்கிற ஆசை, பாவம் அவளுக்கு இருக்கு. ஆனா நான் முடியாதுன்னேன்.''

''நீங்க லாவண்யாவை எட்டி நின்னு லவ் பண்றேன்னு உங்க அம்மாவுக்குத் தெரியாதா?''

''தெரியும். அதனால்தான் உன்னைப் பண்ணிக்கணும்னு அவ விருப்பப்படறா!''

''அப்ப லவ்வுக்கு ஒருத்தி. லைஃபுக்கு ஒருத்தியா?''

''லைஃபுக்கு ஒருத்தி வந்துட்டா லவ் போயிடும்னு அவ நினைக்கிறா.''

''நீங்க என்ன நினைக்கிறேள்?''

''லைஃபும் போயிடும். லவ்வும் போயிடும்.''

''கரெக்ட் ரிப்ளை. ரெண்டும் போகட்டும்''

''என்ன சொன்னே, ஹரிணி?''

''நான் சரின்னுக்க. நமக்கு வேறே வழியே இல்லே. என் தலையெழுத்து நான் உங்களுக்கு கழுத்தை நீட்டித்தான் ஆகணும்.''

''நோ, நோ... ஹரிணி. விளையாடாதே.''

''இத்தனை நாளா என் பிடிவாதத்துக்கு அப்பா அம்மா அடங்கிப் போயிருந்தான்னு தான் நான் நெனைச்சிண்டிருந்தேன். ஆனா இப்பத்தான் புரியறது. அவங்க அடங்கலே, வெறுமனே அலட்சியம் செய்து விட்டுக் கொடுத்தான்னு.''

''அதனாலே...''

''அம்மா சொன்னதை யெல்லாம் நேத்து ராத்திரி நினைச்சுப் பார்த்தேன்.... அவ சொல்றதிலேயும் நியாயம் இருக்கிறதாப் படறது.''

''என்ன நியாயம்?''

''அம்மா சொல்றா. 'ரமணி நல்ல பிள்ளை. தங்கமான குணம். இன்னிக்கு உன் அப்பா கிட்டே ஜூனியரா இருக்கான்... முன்னுக்கு வருவான்... நீயும் மனசு விட்டுப் பழகியிருக்கே. இது மதுரை பூராத் தெரியும்... ரமணியை விட்டுட்டு வேறு மாப்பிள்ளை பார்த்தா, நாளைக்கு நாலு பேர் நாலு விதமாப் பேசுவா' அப்படீன்றா.''

''அதுக்குப் பயந்துண்டு நீ, இப்போ தலையாட்டப் போறியா, ஹரிணி?''

''நோ நோ... அம்மா சொல்ற மாதிரி, நீங்க நல்லவர். ஒரு ஜெண்டில்மேன்... என்னோடு இந்த இரண்டு வருஷப் பழக்கத்திலே உங்க கிட்டே ஒரே ஒரு கெட்ட பழக்கத்தைத் தவிர வேறே எதையும் நான் பார்த்ததில்லே.''

''என்ன கெட்ட பழக்கம்?''

''எட்டி நின்னு லாவண்யாவை லவ் பண்றது.''

''இந்த ரகசியம் நான் சொல்லித்தானே உனக்கே தெரியும்.''

''லவ் பண்றதிலே தப்பு இல்லே, ரமணி. நானும் லவ் பண்ணிடறதுன்னு முடிவு பண்ணிட்டேன்.''

''யாரை?''

''உங்களைத்தான்... நம்ம கலியாணம் இன்னும் ஒரு மாசத்துக்குள்ளே முடிஞ்சுடும். ஹனிமூனுக்கு இத்தாலி, ஃப்ரான்ஸ், அண்ட் ஸ்டேட்ஸ்.''

''ஏன், ஸவுத் ஆஃப்ரிக்காவுக்குப் போகலாமே!''

''அப்பா சொன்ன கன்ட்ரீஸ் இதெல்லாம்.''

''ஹரிணி, உனக்குப் பைத்தியம்தான் பிடிச்சிருக்கு.''

''என்ன செய்யறது? வேறு வழியில்லே. நீங்களும் உங்க மனசைத் திடப்படுத்திக் கொள்ளுங்க.''

''அட ஈசுவரா!''

''இன்னொரு முக்கிய விஷயம். சொன்னவுடன் நாக்கைச் சப்புக் கொட்டுவீங்க.''

''உம். அதையும் சொல்லிவிடு. இன்னிக்கு யார் மூஞ்சியிலே முழிச்சேனோ?''

''அப்பா தொழிலேந்து ரிடையராறார்!''

''என்ன பேத்தறே? வக்கீலுக்கு ஏது ரிடையர்மெண்ட்?''

''அறுபது வயதுக்கு மேலே ஏன் சம்பாதிக்கணும்னு கேக்கறார்.... கொடைக்கானல் பங்களாவிலே அவரும் அம்மாவும் வானப்பிரஸ்தாசிரம வாழ்க்கை நடத்தப் போகிறார்களாம்.''

''பொய். இன்னிக்குக்கூட நான் உங்க வீட்டுக்கு வந்திருக்கேன். ராத்திரிக்குள்ளே



## நடன அரங்கேற்றம்

நாகப்பட்டினம் கே. பி. சந்திரசேகரன் புதல்வி செல்வி **இந்து சீதாலக்ஷ்மியின்** பரதநாட்டிய அரங்கேற்றம் நாகையில் சமீபத்தில் சிறப்பாக நடந்தேறியது! தஞ்சை நடன ஆசிரியர் ஜே. நடராஜனின் மாணவியான குமாரி இந்துவின் நாட்டியம் வெகு நேர்த்தியாகவும், மிகுந்த பாவத்துடனும், தாளக் கட்டுடன் சேர்ந்து, காண்பதற்கு மிகவும் ரம்மியமாக இருந்தது. இவ்விழாவுக்குத் தலைமை தாங்கிய இந்தியன் எக்ஸ்பிரஸ் முன்னாள் ஜெனரல் மானேஜர் ஸ்ரீ டி. கே. தியாகராஜன் பரத நாட்டியத்தின் உயர் சுவைப்பற்றிக் கூறி, கலை ஆர்வம் மிகுந்த குடும்பத்தில் பிறந்த குமாரி இந்துவின் நாட்டிய சிறப்பின் உயர் சுவையும் குறிப்பிட்டார். ஸ்ரீ கே.பி. சந்திரசேகரன் விழாவுக்கு வருகைதந்த அனைவருக்கும் நன்றி கூறினார்.

அஃபிடவிட் தயாராகணும்னு சொல்லியிருக்கார். நீ சொல்றது பொய். அவர் ரிடையராக மாட்டார். எந்தப் பெரிய வக்கீலும் தொழில்லே கோபுர விளக்கா இருக்கிறப்போ ரிடையராக மாட்டார்!''

''என் அப்பாதான் ஒரு தனி ரகம்னு உங்களுக்குத் தெரியுமே, ரமணி. அம்மா சந்தோஷத்திலே குதிக்கறா. கலியாணமாகி முப்பத்தஞ்சு வருஷத்துக்கு அப்புறமாவது தனக்கு விடியறதேன்னு அவளுக்கு ஒரே திருப்தி.''

''என்ன திருப்தி?''

''பின்னே என்ன? கார்த்தாலே ஏழு மணிக்கு ஆபீஸ் ரூம்லே நுழைஞ்சா, அப்புறம் எங்கே அம்மாவைப் பார்க்கிறதும் பேசறதும்? ரிடையராகிட்டா...?''

''புரியறது. உன் அம்மாவுக்கு இந்த வயசுக்கு மேலே இப்படி ஒரு திருப்தி இருக்க வேண்டாம்.''

''ரமணி!''

''என்ன?''

''ஒண்ணு சொல்லட்டுமா?''

''சொல்லு.''

''நான் இப்ப ரொம்ப ஹாப்பியா இருக்கேன்.''

''ஏன்?''

''என் மனசை அம்மாவும் அப்பாவும் மாத்தினதுக்கு. உங்களை நான் வெறும் ஃபிரெண்டாவே இத்தனை நாள் மதிச்சது எவ்வளவு முட்டாள்தனம்னு இப்பத்தான் புரியறது... சே, இந்த ரெண்டு மூணு வருஷத்தை எப்படி வேஸ்ட் பண்ணிட்டோம்?''

ரமணி பதில் பேசவில்லை. ஹரிணிக்கும் அவனுக்கும் ஏற்பட்டிருந்த நட்புப் பாதையில் இப்படி ஒரு திருப்பம் பிறக்கும் என்று அவன் கனவிலும் நினைக்கவில்லை. ஹரிணி அவனுடைய கன்னத்தில் பொய்க் கோபத்தில் அறைந்தபோதும், ஒருவர் கையை ஒருவர் பிடித்துக் கொண்டு மழைத் தண்ணீரில் நடந்தபோதும், ஹரிணிக்கு டைஃபாய்டு வந்தபோது சதா சர்வகாலமும் கூடவே இருந்து கவனித்துக் கொண்ட போதும் காதல் என்னும் உணர்ச்சியோ, காமம் என்னும் வீழ்ச்சியோ அவனிடம் ஏற்படவில்லை.

அவன் மௌனமாக அவளையே பார்த்தவாறு நின்றான். செக்கச் செவேலென்ற ஹரிணியின் நிறமும், தளதளவென்று சிலை போன்ற அவளுடைய மேனியும் அவனுடைய நெஞ்சைத் தொடவில்லைதான். ஆனால் அவர்களைப் பெற்றவர்கள் செய்த முடிவுக்கு ஏற்கனவே இசைந்துவிட்ட ஹரிணியும், அந்த முடிவுக்குக் கட்டுப்பட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு விட்டால் தானும் திருமணத்துக்குப் பிறகு எப்படி இருப்பார்கள்? நட்பு இருந்த இடத்தில் தாம்பத்தியத்துக்கு அத்தியாவசியமான அன்பும் உடலுறவும் ஓர் அசம்பாவிதமாகி விடாதா? மனத்துள் உறைந்துவிட்ட லாவண்யாவை உறங்க வைத்துவிட்டு அவன் எப்படி ஒரே கட்டிலில் ஒரே மெத்தையில் ஒரே கொசு வலைக்குள் ஹரிணியுடன் உடல் உராய்ந்து உறங்குவான்?

''என்ன யோசிக்கிறீங்க, ரமணி?''

''ஹரிணி, என்னால் உன்னைக் கல்யாணம் செய்துகொள்ள முடியாது.''

''இதைத்தான் நானும் அப்பா கிட்டே சொன்னேன். நமக்குள்ளே இருக்கிறது வெறும் ஃப்ரெண்ட்ஷிப்புன்னு சொன்னேன். அவர் என்ன சொன்னார், தெரியுமா? அந்த ஷிப்பை விட்டுட்டு லவ்ஷிப்பிலே ஏறுன்னார்.''

''உன் அப்பாவா இப்படிச் சொன்னார்? என் ஸீனியரா?''

''ஆமாம். இன்னொரு வார்னிங்கும் கொடுத்தார்.''

''என்ன?''

''அப்பா கிட்டே இருக்கிற லா லைப்ரரி மாதிரி மெட்ராஸிலே இருக்கிற பெரிய பெரிய லாயர்களிடம் கூடக் கிடையாது. ஆயிரக்கணக்கான புஸ்தகம்.''

''தெரியும்.''

''பெரிய பெரிய கம்பெனிகள், பணக்காரர்கள் எல்லாம் அப்பாவோட கட்சிக்காரர்கள்.''

''தெரியும்.''

''நீங்கதான் அவரோட முதல் ஜூனியர்! ஜூனியர்லே ஸீனியர்!''

''தெரியும்.''

''நீங்க என் கழுத்திலே தாலியைக் கட்ட ரெஃப்யூஸ் பண்ணிவிட்டீங்கன்னு, லா லைப்ரரி கிடையாது, பெரிய பெரிய கட்சிக்காரர்கள் கிடையாது, ஜூனியர் ஸ்தானமும் கிடையாது.''

''என்னைப் பயமுறுத்தறாரா? இல்லே, விலை கொடுத்து வாங்கப் பார்க்கறாரா?''

''ரெண்டுமில்லே. யதார்த்தமா ஒளிவு மறைவு இல்லாமல் சொன்னார். 'எனக்குப் பிடிச்ச பிள்ளை இதுவரை என் மனசுக்கு விரோதமில்லாம நடந்துண்டிருக்கான்.... அவன் என் மாப்பிள்ளை இல்லேன்னு, அப்புறம் அவனைப் பார்க்கறபோதெல்லாம் எனக்கு அவன் மேலே எரிச்சலும், வெறுப்பும் தான் வரும்'னு சொல்றார்.''

மீண்டும் ரமணி மௌனியானான். மதுரையிலே பெரிய அட்வகேட் என்று பெயர் எடுக்க வேண்டும் என்று அவன் துடித்தானே? அதற்கு அஸ்திவாரமாகத்தானே ராமையாவிடம் ஜூனியராகப் போகத் தவமிருந்தான்? ராமையா அவனை இப்போது உதறி எறிந்தால், அவன் சாதாரண வக்கீலாகத்தானே வாழ முடியும்? ராமையாவின் கேஸ் கட்டுகள் சிதறிப் போய்விடும். ஒரு அவசரத்துக்குக்கூட லா லைப்ரரிக்குச் சென்று வேண்டிய புத்தகத்தைப் புரட்ட முடியாது.

''மனசு மாறுகிறதா, ரமணி.''

''குழம்பறது.''

''அது மாற்றத்துக்கு அறிகுறி.''

''நான் உடனடியாக உன் அப்பாவைப் பார்த்துப் பேசணும்.''

''அவர் உங்க கிட்டே பேச வேண்டிய அவசியம் இல்லே. பேசவும் மாட்டார்.''

''ஏன்?''

''உங்க அம்மாவும் அவரும் பரஸ்பரம் பேசிவிட்டார்கள். உங்க மனசு மாறிவிடும்னு நம்பறா.''

''எப்படி?''

''நான் ஒரு பெண். என் மனசே மாறிடலியா?''

''நான் ஓர் ஆண். மனசு மாறும்படி போயிடலாம் இல்லையா?''

---



**அவசரப்படும் மாணவன்!**

அவசரப்படும் மாணவன் பாடங்களை மெதுவாகத்தான் கற்றுக் கொள்ள முடியும்.

—ஜென் [illegible]

''மாறும்ப் போகலாம்னுதான் சொல்றேனே தவிர, மாறுதுன்னு அடிச்சுப் பேசத் துணிவு இல்லியே ரமணி...''

''ட்ரூ!''

''இதுக்குக் காரணம் என்ன தெரியுமா?''

''தெரியும். இருந்தாலும் நீயும் சொல்லு.''

''லாவண்யா!''

''கரெக்ட்.. பர்ஃபெக்ட்லி கரெக்ட்!''

''இன்னும் ஒன்றும் சொல்லட்டுமா? ரமணி?''

''சொல்லு, ஹரிணி!''

''உங்க மனசிலே இருக்கிறது காதல் இல்லே... ஒரு வெறும் பிரமை. இல்லாமல் போற ஒரு மயக்கம்... அவ அழகு, நடை, பார்வை இதெல்லாம் உங்க கண்ணுக்கு அபூர்வமாத் தெரியறது!''

''இருக்கலாம்.''

''கடைசியா ஒண்ணும் சொல்றேன், ரமணி. உங்க லட்சிய வாழ்க்கைக்கு லாவண்யா ஏற்ற மனைவி இல்லே. நான் ஒரு பெரிய வக்கீலோட பெண்... உங்க ஆசையையும் துடிப்பையும் என்னாலே புரிஞ்சு கொள்ள முடியும். அதுக்கு ஏற்றபடி நடந்துகொள்ள முடியும்... கல்யாணமாறு தாம்பத்தியத்திலே யதார்த்த வாழ்க்கைதான் ரொம்ப அவசியம். இதை லாவண்யாவால் தர முடியாது. ஏன்னு கேட்டா, அவ இதுக்குத் தன்னைத் தயார் பண்ணிக் கொள்ளவில்லே. பண்ணிக்க வாய்ப்பு இல்லே... உங்க ஆசை நிறைவேறிட்டா, அப்புறம் ஆசை இருந்த இடத்திலே அலுப்புத்தான் மிஞ்சும். ஒரு டூரிஸ்ட் கைய்ட் உங்க வாழ்க்கைக்கு கைய்டா இருக்க மாட்டா!''

''எனக்குக் குழம்புறது.''

''என் கழுத்திலே தாலியைக் கட்டுங்கள், ரமணி. பீ கம் எ கிரேட் லாயர். ஐ வில் ஹெல்ப் யு!''

''ஹரிணி''

''யெஸ்.''

''பட் ஹௌ கான் ஐ லவ் யு?''

''யூ நீட் நாட். நான் காத்திருக்கிறேன்... உங்க மனசிலே இருக்கிற லாவண்யாவை அனுப்பிவிட்டு என்னே என்னிக்கு ஏத்துக்கிறீங்களோ, அன்னிக்கு நான் உங்க மனைவியா வரேன். அதுவரையில் பிறத்தியார் கண்ணுக்கு தம்பதியா வாழ்வோம்!''

ரமணியால் இதை ஏற்க முடியவில்லே.

(தொடரும்)

# செய்திமணிகள்

○ கங்கை ஆற்றின் குறுக்கே கான்பூருக்கு அருகில் புதிதாகக் கட்டப்பட்டுள்ள பாலம் 'கங்கா பாலம்' இந்தப் பாலத்தைக் கட்டும் நிர்மாணப் பணிகளில் சீதாப்பூர் திறந்தவெளிச் சிறையைச் சேர்ந்த 200 கைதிகள் ஒத்துழைத்திருக்கின்றனர். கைதிகள் தவிர இரண்டாயிரம் தொழிலாளர்களும் மும்முரமாகச் செயல்பட்டு இந்தப் பாலத்தைக் கட்டி முடித்திருக்கின்றனர். பாலத்தைக் கட்டி முடிக்க இரண்டரை ஆண்டுகள் ஆகியிருக்கின்றது.

○ மத்தியப் பிரதேசம் - யமுனா முதல் கோதாவரி வரை பரவிக் கிடக்கும் இந்த மாநிலத்தின் மொத்த நிலப்பரப்பு - 3,43,408 சதுரகிலோ மீட்டர். இந்திய யூனியனில் பரப்பளவில் மிகப் பெரியது இந்த மாநிலம். 1976-77-ம் ஆண்டுக்கு நிர்ணயிக்கப்பட்ட குடும்பக் கட்டுப்பாடு கருத்தடை அறுவைச் சிகிச்சை இலக்கை, எண்ணி ஏழு மாதங்களில் பூர்த்தி செய்த முதல் மாநிலம் இதுவே. கடந்த டிசம்பர் 14-ந் தேதி வரை சுமார் எட்டு லட்சம் அறுவைச் சிகிச்சைகளை நடத்தி, அபரிமித சாதனை புரிந்துள்ள முதல் மாநிலமும் இதுவே.

○ புதுதில்லியைச் சேர்ந்த பல் வைத்தியர் டாக்டர் ஸ்ரீ.சத்தேன் பாத்ரா என்பவர் இறந்து போன தம் தந்தை ஸ்ரீ கிரிதாரிலால் பாத்ராவின் உடலை புதுதில்லியில் உள்ள அனைத்து இந்திய மருத்துவ விஞ்ஞானக் கழகத்தின் உடல் கூறு சாஸ்திர இலாகாவுக்கு நன்கொடையாக வழங்கியுள்ளார். தாம் இறந்த பிறகு தம் உடலை இப்படி நன்கொடையாக வழங்க வேண்டும் என்று ஸ்ரீ கிரிதாரிலால் புதுமையான ஒரு உயிலையும் எழுதி வைத்திருந்தாராம்.

இந்தியா உட்பட உலகம் முழுவதிலுமுள்ள மருத்துவக் கல்லூரிகள் பலவற்றுக்கு மாணவர்களின் ஆராய்ச்சிக்கு உதவ இறந்தவர்களின் உடல்கள் கிடைப்பது மிக மிக அரிதாக உள்ளது.

நில உச்சவரம்புச் சட்டம் கடன் நிவாரணச் சட்டம்....இப்படி அமலில் இருக்கும் சட்டங்களில் ஒன்று ''உடல்கூறு சட்டம்.'' அப்படியென்றால்.... யாரும் உரிமை கோராத இறந்தவர்களின் உடலை மருத்துவக் கல்லூரிகளுக்கு நன்கொடையாக வழங்குவது இச்சட்டத்தின் நோக்கமாகும். இந்தச் சட்டம் - மகாராஷ்டிரா, பஞ்சாப் மாநிலங்களில் அமலில் உள்ளது.



○ சென்னை விமான நிலையத்தைச் சுற்றியுள்ள பகுதிகள் இனி 'பச்சைப்பசேல்' என்று காட்சி தந்து, கண்களுக்குக் குளிர்ச்சியூட்டும். ஏன் என்கிறீர்களா? நாட்டில் முக்கிய விமான நிலையத்தைச் சுற்றியுள்ள பகுதிகள் முழுவதும் மரங்களை நடவேண்டும் என்று மத்திய விவசாய பாசன அமைச்சகம் தீவிரத் திட்டம் ஒன்றைத் தீட்டியுள்ளது. இத் திட்டத்தின் கீழ், மரங்கள் நடுவது குறித்த உத்தரவு தமிழக அரசுக்கும் அனுப்பப்பட்டுள்ளது. இப்படி மரங்களை வளர்ப்பதால் விமானங்கள் எழுப்பும் காதைத் துளைக்கும் சப்தம் கட்டுப்படுத்தப்படுமாம். அதுமட்டுமல்ல - பயணிகள் விமானம் கீழே இறங்கும்போது சுற்றி கண்ணுக்குக் குளிர்ச்சி தரும் 'பச்சைப்பசேல்' மரங்களைப் பார்த்தால் ஒரு புத்துணர்ச்சி பெறுவார்களாம்.

○ 'ரெயில் போக்குவரத்து மியூசியம்' புதுதில்லியில் உள்ள சாணக்கியபுரியில் அமைந்துள்ளது. இந்த மியூசியம் இந்தியாவிலேயே முதன் முதலாகத் தோன்றியது. 1876-ல் வேல்ஸ் இளவரசர் பயணம் செய்த ரெயில் பெட்டிகளும், மைசூர் மகாராஜா பயணம் செய்த ரெயில் பெட்டிகளும் இங்கே இடம் பெற்றிருக்கின்றன.



# தந்தி வந்தபோது...

தூக்கக் கலக்கத்தில் முதலில் அது கனவில் கேட்டாற் போல் இருந்தது. ''ஸார்!.... ஸார்!...'' இந்த நேரத்தில் எங்கே யாரை யார் கூப்பிடுகிறார்களோ... அடுத்த தெருவில் யாராவது இரவு ஆட்டம் சினிமா பார்த்துவிட்டு வீடு திரும்பிக் கதவை இடிக்கிறார்களா? மீண்டும் கண்கள் செருகிக் கொண்டன. மீண்டும் உறக்கத்தைப் பிளந்து கொண்டு ''ஸார்! ஸார்!'' என்றுகுரல் சற்று அருகிலேயே கேட்டது. இதே தெருப்போல, இதே வீடு போல. கூடவே 'ட்ரிங்...ட்ரிங்' சைக்கிள் மணி ஓசை. ''ஸார்! ஸார்...!'' சைக்கிள் மணி.

புரண்டு படுத்தாள். கண் இமைகள் இலேசாய்ப் பிரிந்தன. கீழ்க் குடித்தனக்காரர்களைப் பார்க்க யாராவது வந்திருக்கிறார்களா? அதற்கு நேரம் காலம் கிடையாதா? கட்டில் பக்கத்திலிருந்த மேஜை மேல் பார்வையைத் திருப்பினாள். அலாரம் கடிகாரத்தின் ரேடியம் முனை முட்கள் ஒன்றேகால் மணி என்று காட்டின. இந்த நேரத்தில்....

''டெலிக்ராம்!''

சரேலென்று போர்வையை உதறி விட்டு எழுந்து விரைந்து கதவைத் திறந்துகொண்டு அந்த மாடியின் வராந்தாவுக்குப் போய் நின்று கீழே பார்த்தாள்.

சைக்கிள் மணிச் சத்தம். ஒரு ''ஸார்!'' ஒரு '''டெலிக்ராம்.''

கீழ்ப் பகுதியின் முன் வராந்தாவில் யாரோ விளக்கை ஏற்றினார்கள். தொடர்ந்து இரும்புக் கதவின் கோத்ரெஜ் பூட்டில் சாவி இடிபடும் ஒலி. பிறகு கதவு சர்ரென்று சரிந்து திறக்கும் ஒலி.

கீழ்ப் பகுதிக் குடும்பத்தின் தலைவர் வாசுதேவன் நடந்து போய்க் காம்பவுண்ட் கேட்டைத் திறப்பது தெரிந்தது. முணுமுணுப்பாய்ச் சுருக்கமான விசாரணை. பதில். பெயரும் முகவரியும் சரிதான் என்று சொல்கிறார் போலும். கையெழுத்திட்டுத் தந்தியை வாங்கிக் கொண்டார். பிறகு அவர் உள்பக்கம் திரும்ப, மறுபடியும் ஒவ்வொரு கதவாக மூடும் ஓசை. அவரோ தந்திச் சேவகனோ அவள் அங்கு மேலே நின்றிருந்ததைப் பார்க்கவில்லை. சைக்கிள் தெருவில் ஓடி மறைந்தது. அந்த உருவமும் குரலும் மணிச்சத்தமும் அகன்றதே பெரியதோர் ஆறுதலாய் இருந்தது. அச்சுறுத்தும் நிழலுருவம் ஒன்று விலகினாற்போல் மன இறுக்கம் சட்டென்று தளர்ந்து கொடுத்தது.

சாந்தாவும் திரும்பி வந்து வராந்தாக் கதவைத் தள்ளிக் கொண்டு மறுபடியும் படுத்தாள். ஆனால் தூக்கம் கலைந்து விட்டது. முன் இரவில் சற்று அயர்ந்து உறங்கியிருந்தாள். அதனாலும், டெலிக்ராம் என்ற சொல்லின் உலுக்கலில் முழு விழிப்பு வந்து விட்டதனாலும் இப்போது கண்கள் மூட மறுத்தன.

தந்தி என்ற வார்த்தைக்குத்தான் எத்தனை கொடிய சக்தி! அவள் காதுகள் உன்னிப்பாயின. கீழேயிருந்து ஏதாவது அழுகையோ கூவலோ ஒலிக்கிறதா? சே! தந்தி என்றதுமே ஏன் அழுகையையும் பதற்றத்தையும் எதிர்பார்க்கிறோம்? நல்ல செய்திகள் கூடத்தான் தந்தியில் வரலாம். அந்தத் தந்தியில் என்ன செய்தியாக இருக்கும்? நள்ளிரவிலாவது போய்ச் சேர்ந்துவிட வேண்டும் என்கிறந்

போல் அவசரத் தகவலென்றால் என்ன ஆபத்தோ! பாவம், அவர்கள்!

கீழ்ப் பகுதியினர்தான் வீட்டுச் சொந்தக்காரர்கள். மாடி ஒரு தனிக் குடியிருப்பு. சிறியதானாலும் வசதியுள்ளது. ஒரு வசிப்பறை, இணை குளியலறை, சமையலறை — இவ்வளவுதான். ஆனால் அதே பொம்மையளவில் முன்பக்கம் 'பால்கனி' போல் ஒரு திறந்த வராந்தா. காற்றாட உட்காரலாம். அவள் அங்கு சில பூந்தொட்டிகளும் வைத்திருந்தாள். ஒண்டி ஆளுக்கு இந்த இடம் போதாதா? ஆனால் அந்த ஒண்டி ஒரு பெண்ணாக இருந்ததால் சில பாதுகாப்புகள் தேவைப்பட்டன. அதற்கேற்ப வீட்டுக்காரர்கள் நல்ல மனிதர்களாய் அமைந்திருந்தார்கள். வாசுதேவனுக்கு ஐம்பது வயது இருக்கும். அது ஒன்றே கண்ணியத்துக்கு உத்தரவாதமில்லை என்பது சாந்தா அறியாததல்ல. சில எழுபத்தைந்து வயதுக் கிழவர்களும் பெண்களை அசிங்கமாய்ப் பார்ப்பது அவளுக்குத் தெரியும். ஆனால் வாசுதேவன் அந்த இனமே அல்ல. எழுபத்தைந்து என்ன, இருபத்தைந்து வயதில் கூட அவர் பார்வைக்கு முன் எந்தப் பெண்ணும் அவமானத்தால் கூசியிருக்க முடியாது.




அவர் மனைவி செல்லம் ஓர் அமைதியான ஜீவன். மலையே புரண்டாலும் அதிர மாட்டாள். ஒருகால், மலை புரண்டு விட்டதால்தான் அந்த அமைதியா? அவர்களுடைய முதல் குழந்தையான குமார் இருபது வயதுள்ள மகன் பெங்களூரில் மருத்துவ விடுதி ஒன்றில் கால்கள் செத்துப் போன வாத நோயாளியாக இருக்கிறான். வைத்தியம் நடந்து கொண்டிருந்தாலும் குணம் பெறுவான் என்ற நம்பிக்கை அதிகம் இருப்பதாய்த் தெரியவில்லை. சிறிது காலமாக, கைகளும் பாதிக்கப்பட்டு விடுமோ என்ற கவலைக்கும் இடம் இருந்து வருகிறதாம்... ஒருவேளை அவன் உடல் நிலையைப் பற்றி ஏதானும் அவசரச் செய்திதான் தந்தியில் வந்திருக்குமோ? சாந்தா மீண்டும் உன்னிப்பாய்ச் செவியுற்றாள். கீழேயிருந்து சத்தமே வரவில்லை.

அந்த முதல் மகனுக்குக் கீழே அவர்களுக்கு இன்னும் மூன்று குழந்தைகள். இருபையன்கள், ஒரு பெண், எல்லோரும் இங்கு பெற்றோருடன் தான் இருக்கிறார்கள். அவர்களில் பெரியவன் சேகருக்குப் பதினாறு பதினேழு வயது இருக்கும். சாந்தாவுக்கு ஏறக்குறைய அந்த வயதில் ஒரு தம்பி உண்டு. அதனால் சேகரிடம் அவளுக்கு ஓர் அலாதி அன்பு. நேற்று மாலைகூட ஆபீஸிலிருந்து திரும்பிய பின் அவனோடு ஓர் ஆட்டம் செஸ் விளையாடிவிட்டுத்தான் தன் இரவு உணவைச் சமைக்கச் சென்றாள்.

சேகரைப் பார்க்கும் போதெல்லாம் அவளுக்குத் தன் தம்பி குமார் நினைவு வரும். குமார் குழந்தைப் பருவம் முதலே ஆஸ்த்மா நோயாளி. சரியாகப் பள்ளிக்கூடம் போகவில்லை. இப்போதும் சற்று அலட்டிக் கொண்டால் இழுப்பு வந்து விடும். வீட்டிலேயே இருந்ததனால் ஓவியக் கலையில் இருந்த ஆர்வத்தை வளர்த்துக் கொள்ள முடிந்தது. அப்பாவுடன் சண்டை ஆரம்பித்ததே அதனால்தான். ''வீட்டிலிருந்துண்டே பெயின்டிங் பண்ண முடியும்னு வீட்டிலிருந்துண்டே வேறு ஏதாவது சின்ன கை வேலைகள் பண்ணி நாலு காசு சம்பாதிக்க முடியாதா? மத்தவா உழைப்பிலேயே உட்கார்ந்து சாப்பிடணும்னு அது என்ன சோம்பேறித்தனம்? இருக்கிறது ஒரே ஆம்புளைப்பையன். மத்த நாலு பெண் பசங்க.




நான் சாசுவதமா? எனக்கும்தான் வயசாயிண்டு வரது. வரவர பலவீனம் அதிகமாறது. முதல் பெண்ணுக்காவது கல்யாணம் பண்ணிப் பார்ப்போம்னு அதுக்கும் வழியில்லே. இந்த உதவாக்கரைப் பிள்ளைக்கு ரோசமே இருக்காதா? படிப்பில்லேன்னு ஒரு சாக்கு. உடம்பு சரியில்லேன்னு ஒரு சாக்கு. வேலை வெட்டி செய்யாமல் இருக்க ஏதோ ஒரு சாக்கு....''

இந்த இரவின் அந்தகாரத்திலும் அப்பாவின் ஆத்திரம் கனலும் கண்களையும் கோபத்தில் சிவக்கும் முகத்தையும் அவளால் மனத்தில் துல்லியமாய்ப் பார்க்க முடிந்தது. எல்லாவற்றையும் கேட்டுவிட்டுக் கண்களில் நீர் மல்க, அம்மாவின் மாலையிட்ட புகைப்படத்தின் எதிரே மௌனமாய்த் தலைகுனிந்து நிற்கும் குமாரைப் பார்க்க முடிந்தது. அன்றாடம் நிகழும் இதுபோன்ற காட்சிகளால் செயலற்று மூலைக்கு மூலை பயத்தோடு பதுங்கும் மூன்று தங்கைகளைப் பார்க்க முடிந்தது.

கடைசியில் ஒருநாள் அவன்தான் சொன்னான்: ''அப்பா, என் கல்யாணத்தைப் பற்றிக் கவலைப்படாதீங்கோ. நான் கிராஜுவேட் ஆயாச்சு, வேலைக்குப் போறேன். உங்ககூடச் சேர்ந்து இந்தக் குடும்பத்தைத் தாங்கறேன். குமாரைக் கோபிச்சுக்க வேணும். அவன் மனசு ஓவியம் வரையறதில் இருக்குன்னா அவனைப் போய்க் கூடை முடையவோ அல்லது ஒரு கடையில் சாமான் எடுத்துக் கொடுக்கவோ அமர்த்தினால் மட்டும் அதில் நிலைக்கப் போறானா? சந்தோஷமில்லாமல் செய்யற எந்த வேலையில் வெற்றியடைய முடியும்? அவன் பெயின்டே பண்ணட்டும். யார் கண்டா, சம்பாதிக்கணும்னு இருந்தால் அவன் ஆர்ட்டிஸ்டாய் இருந்தே சம்பாதிக்கலாம். நீங்க யாரும் கவலைப்படாதீங்கோ.''

வேலைகளுக்கு மனுப் போட்டு இறுதியில் சாந்தா ஊர் விட்டு ஊர் வந்து நல்ல சம்பாத்யத்தில் இப்போது இங்கே உத்தியோகம் பார்த்து வந்தாள். ஊரில் முதல் தங்கை பள்ளிப் படிப்போடு நிறுத்தி விட்டு வீட்டைப் பார்த்துக் கொண்டிருந்தாள். வீட்டிலிருந்த




படியே எவனையோ காதலிக்கவும் தொடங்கி விட்டாளாம். சமீபத்தில் அப்பா கவலையாக எழுதியிருந்தார். விரைவில் அவள் ரஜா எடுத்துக் கொண்டு ஊருக்குப் போய் விஷயம் விபரீதமாகுமுன் அதே பையனோடு... அல்லது அவன் தகுதியற்றவனாய் இருந்தால் வேறு யாருடனோ, தங்கையின் கல்யாணத்தை முடித்துவிட வேண்டும். கடன் வாங்க வேண்டியிருந்தாலும் பரவாயில்லை. இளைய இரு தங்கைகளைப் பற்றிக் கவலையில்லை. நன்றாய்ப் படிக்கிறார்கள். பட்டப் படிப்புக்குக் கூட உரியவர்கள்தான். பிறகு அவர்களும் விரும்பினால் வேலைக்குப் போகலாம். அப்பா விரைவிலேயே நிம்மதியாக வேலையிலிருந்து ஓய்வு பெற முடியும். விடிவு காலம் கூப்பிடு தொலைவிலேயே இருக்கிறது.

குடும்பத்தை விட்டு இவ்வளவு தூரம் வந்ததில் அவள் மிகவும் ஏங்கியது தம்பிக்காகத்தான். இத்தனைக்கும் அவர்கள் அடுத்தடுத்துப் பிறந்தவர்கள்கூட இல்லை. முதல் தங்கை இருவரிடையே இருந்தாள். எனினும் அவளும் குமாரும் ஒத்த இதயங்கள். அவனுடைய நனைந்த விழிகள் அம்மாவின் படத்துக்குப் பிறகு அவளைத்தான் பார்க்கும். அவள் ஒரு புன்னகை செய்தால் தன்னை யாரோ முதுகில் தட்டிக் கொடுத்தாற் போல் அவன் உணர்வான். அவன் உதடுகளில் துடிக்கும் 'அப்படியெல்லாம் பேசாதீங்கோப்பா' என்ற சொற்கள் அவள் வாயிலிருந்துதான் வெளிப்படும். அவன் குளிக்கும்போது பாடினால் வேலை பேட்டி எதற்கோ அழைப்பு வந்திருக்கிறதென்று அவள் புரிந்து கொள்வாள். அவன் முகத்தில் தீவிரம் தெரிந்தால் ஏதோ புதிய ஓவியம் உள்ளத்தில் உருவாகிக்கொண்டிருக்கிறதென்று அவள் புரிந்து கொள்வாள். எத்தனையோ முறைகள் அவன் வெளிப்புறம் 'ஈஸல்' முன் நின்று சீலையில் வர்ணங்கள் தீட்டிக் கொண்டிருக்கும் போது அவளும் அருகில் உட்கார்ந்து புத்தகம் படித்துக் கொண்டிருந்திருக்கிறாள். இருவரும் பேசிக் கொள்ளாமலேயே ஒரு தோழமையின் இணக்கம் அந்த மௌனத்தில் உறையும்.

அத்தகைய ஒரு தம்பியின் இல்லாமையைத்தான் இங்கு சேகர் பூர்த்தி செய்தான். முதலிலெல்லாம் வெட்கப்பட்டுக் கொண்டு 'மிஸ் சாந்தா' என்று எப்போதாவது அவசியத்துக்காக மட்டுமே அழைத்து வந்தவனிடம் அவள் ஒருநாள், ''என்னை அக்கான்னு கூப்பிடறயா சேகர்? எனக்குச் சந்தோஷமாயிருக்கும். உன் மாதிரி எனக்கு ஒரு தம்பி இருக்கான்'' என்றாள். பிறகு தன் தவறு உறைத்தது போல் வீட்டுக்காரரிடம் ''ஸாரி, ஸார்! என்னளவு பெரிய பெண் இருக்க உங்களுக்கும் மிஸஸ் வாசுதேவனுக்கும் வயசாகலே, நீங்க என்ன நினைச்சுப்பேளோ! ஏதோ ஒரு ஸென்டிமென்டல் மூட்லே சொல்லிட்டேன்'' என்றாள்.

''பரவாயில்லேம்மா! நீயும் அவனும் உடன் பிறந்தவா மாதிரி பழகினால் எனக்குச் சந்தோஷம்தான்'' என்றார் வாசுதேவன்.

''நிஜமாகவே சேகருக்கு ஒரு அக்கா எங்க மூத்த பெண் — ஒருத்தி இருக்கா'' என்று புன்னகையோடு தெரிவித்தாள் செல்லம். அன்றுதான் அந்த மகளைப் பற்றிய விவரங்களையும் சொன்னாள். அப்போதும் அவள் புன்னகையில் அமைதிதான்.

சாந்தாவுக்குத் தொண்டை அடைத்தது. எதுவும் பேசாமல் செல்லத்தின் கையை ஒரு கணம் தன் இரண்டு கைகளாலும் மிருதுவாய்ப் பிடித்துக்கொண்டு அவள் முகத்தைப் பார்த்தாள்.

''நீ நிஜமாகவே ரொம்ப ஸென்டிமென்டல்தான் அக்கா!'' என்று அப்போது சேகர் சிரித்துக் கொண்டு சொன்னான். அன்றிலிருந்து அவர்களிடையே அந்தப்புதிய சகோதரத்துவம் தோன்றியது. அன்றாடம் தன் கல்லூரி விஷயங்களை அவன் அவளிடம் சொல்வான். அவனுக்குச் சதுரங்க விளையாட்டில் மிகவும் ஈடுபாடு. அவள்தான் அவனுக்குக் கற்றுக் கொடுத்தாள். ஆகவே இப்போதெல்லாம் அவனுக்கு, தான் வென்றால் வென்ற பெருமை; தான் தோற்றால் தன் மாணவி வென்ற பெருமை. ''எப்படியும் திருப்தி எனக்குத்தான், பார்த்தாயா அக்கா!'' அவனுக்கு எப்படி அந்த விளையாட்டை அவன் தாத்தா — வாசுதேவனின் தந்தை — கற்பித்

தாரென்றும் அதில் குதிரைகளை இயக்குவதில் அவர் எவ்வளவு கெட்டிக்காரர் என்றும் அவன் விவரிப்பான். "க்வீன், நைட் ரெண்டும் ஆபத்தில் இருந்தால் க்வீனைக் கூட விட்டுட்டு நைட்டைத்தான் காப்பாத்திப்பார் அக்கா!" என்று சொல்வான்.

சட்டென்று இப்போது அவளுக்கு ஒன்று நினைவுக்கு வந்தது. நேற்று மாலை ஆட்டம் ஆடிய போது அவன் "ஊரிலே தாத்தா ரொம்ப ஸீரியஸாய்ப் படுத்துண்டிருக்காராம். அப்பா ரொம்ப கவலையாயிருக்கார் அக்கா! ஒரு நடை ஊருக்குப் போய் விட்டு வரணும்னு சொல்லிண்டிருக்கார்" என்றிருந்தானே? அப்படியானால் அந்தத் தந்தி....? பெரியவரைப் பற்றி ஏதாவது கெட்ட செய்தி வந்திருக்குமா? பாவம், சேகர் மிகவும் வருந்துவான். சின்னப் பையன்தானே! தாத்தாவிடம் எவ்வளவு ஒட்டுதல் அவனுக்கு!

அவள் மெல்ல எழுந்து, உட்புறம் போகும் கதவைச் சத்தப்படுத்தாமல் திறந்துகொண்டு மெத்தென்று ஜாக்கிரதையாய் அடி வைத்து நடந்து, அறையை ஒட்டியிருந்த படிக்கட்டின் மேல் நிலைக்கு வந்து நின்றாள். குனிந்து கீழே பார்த்தவாறு உற்றுக் கேட்டாள்.

இறுக மூடிய கண்களுள் தெளிவற்ற பிம்பங்கள் ஓடின. தூக்கத்தை வரவழைக்க ஒன்று இரண்டு மூன்று நான்கு ஐந்து என்று எண்ணத் தொடங்கினாள். அப்பாவின் முகம். கோபமாயிருக்கிறார். ஏழு எட்டு ஒன்பது ... ஒவ்வொரு எண்ணாக முன்னேறியது. நாற்பத்தேழு வரையில் வரிசையாய் எண்ணினாள். தொடர்ந்து நாற்பத்தெட்டு, நாற்பத்தொன்பது. ஐம்பது. ஐம்பத்தொன்று. ஐம்பத்தி இரண்டு.... "உதவாக்கரைப் பிள்ளைடா நீ" அம்மாவின் படம். குமாரின் கண்கள். ஐம்பத்திரண்டு, ஐம்பத்தொன்று. ஐம்பத்தி இரண்டு... எவன் மேலேயோ நீ ஆசைப்படறே? ....அப்பா, குமார் ஒரு ஆர்டிஸ்ட்.....' ஐம்பது. ஐம்பத்தொன்று. ஐம்பத்திரண்டு... 'ஸார், டெலிக்ராம்' ... வாத நோயாளியான ஒரு பெண் ... ஐம்பத்தொன்று. ஐம்பத்திரண்டு.... ஐம்பத்தி மூன்று ...க்வீனைக் கூடப் பலி கொடுத்து விட்டு நைட்டைக் காப்பாற்றுவார் ... குட் மூவ், சேகர் நாற்பத்தெட்டு, நாற்பத்தொன்பது. ஐம்பது.... பாவம் அவர்கள்... தம்பி முகம் ... குமார்... அந்த, முகத்தில் கலக்கும் சேகர்... முப்பத்தாறு. முப்பத்தேழு. முப்பத்தெட்டு ...



நூல் நிலைய அதிகாரியிடம் ஒரு வாசகர் வந்தார்: "நான் எடுத்து கொண்டு போன இந்த புத்தகத்தில் ஒரு பத்து ரூபாய் நோட்டு இருந்தது; இதே ஆசிரியர் எழுதிய வேறுபுத்தகங்கள் இருக்கின்றனவா?"
— ஜோக்ஸ் - சாமி



ஒரு நடிகை பத்திரிகை நிருபரிடம் குறைப்பட்டுக் கொண்டாள்: "ஏன் சார், போன முறை நீங்கள் என்னை பேட்டி கண்ட போது 'இதெல்லாம் பத்திரிகையில் வரக்கூடாது' என்று சொல்லிச் சில விஷயங்களைச் சொன்னேனே, அதில் ஒரு வார்த்தை கூட நீங்கள் பிரசுரிக்கவில்லையே, ஏன் சார்?" —சாமி

அதோ, நிச்சயம் அது ஏதோ குரலோசை தான். மெல்லிய ஓசை. அடங்கிய அழுகையா அல்லது பேச்சா என்று புரியவில்லை. மாடிப்படி விளக்கை ஏற்றிக் கொண்டு கீழே போகலாமா?... வேண்டாம், அவர்களுக்குப் பிடிக்காமல் இருக்கலாம்... காலையில் கீழே போய் விவரம் தெரிந்து கொண்டு ஏதாவது உதவி தேவையா என்று விசாரிக்கலாம்.

அவள் திரும்பி முன்பு போலவே ஒலியெழுப்பாமல் நடந்து வந்து கதவை மூடி விட்டுப் படுத்துக் கொண்டாள். தூக்கம் வருகிற அறிகுறியே இல்லை. கீழே ஹால் கடிகாரத்தில் மூன்று மணி அடித்தது. சரிதான், இப்படி விழித்திருந்தால் உருப்பட்டாற் போல்தான்! இதனால் விடியற்காலையில் தன்னை மீறித் தூங்கி விட்டால் அப்புறம் எப்போது எழுந்து எப்போது வேலைக்குப் போவது? தூக்கம் வருகிறதோ இல்லையோ, இப்போது தூங்கித்தான் ஆக வேண்டும். அவள் பிடிவாதமாய்க் கண்களை மூடிக் கொண்டாள். மூடிய இமைகளுள் பார்வை துடித்தது.

வாசுதேவனின் அப்பாவுக்கு எத்தனை வயதிருக்கும்? எழுபது எழுபத்தைந்து இருக்குமா? இதென்ன மீண்டும் சிந்தனைத்தொடர்? கண்களை அழுத்தி மூடிக் கொண்டாள்.

முப்பத்தேழு.. முப்பத்தெட்... முப்பத்து... முப்பத்...

ஐந்து மணி அடித்ததை அவள் கேட்கவில்லை. அவள் தூங்கி விட்டாள்.

கண் விழித்த போது நல்ல சூரிய வெளிச்சம் வந்து விட்டது. மேஜைக் கடிகாரத்தில் ஏழரை மணி. துள்ளிக் கொண்டு எழுந்து உட்கார்ந்தாள். கண்கள் இன்னமும் எரிந்து கொண்டிருந்தன. அதற்காக என்ன செய்ய முடியும்? வேலைக்குப் போக வேண்டாமா?

பல் தேய்த்து விட்டு வந்தாள். திடீரென்று நினைவு வந்தது. முந்தைய இரவு.. இப்போதும் கீழே ஒரே மௌனம்தான். ஓடிப்போய் அவர்களிடம் விசாரித்து விட்டு வந்து விடலாம்.

மாடிப்படிகளில் இறங்க ஆரம்பித்தாள்.

கீழேயிருந்து செல்லமும் வாசுதேவனும் படியேறி வந்து கொண்டிருந்தார்கள். செல்லம் அண்ணாந்து அவளைப் பார்த்தாள். அடங்கிய குரலில் தயக்கத்துடன் சொன்னாள்: "தூக்கத்திலிருந்து எழுப்பிக் கொடுக்க வேணும்னு இருந்தோம்...."

அப்போதுதான் சாந்தா கவனித்தாள். செல்லம் அவளிடம் நீட்டிய கையில் ஒரு தந்தி இருந்தது.

# யாரிடம் கொடுத்தார்?




சரியாக ஒன்பது ஐம்பத்தைந்துக்கு ஆபீசுக்குள் நுழைந்தார் நாராயணன். டிபன் பாக்ஸையும் குடையையும் ஞாபகமாகத் தமது நாற்காலிக்குக் கீழ் வைத்துவிட்டு கையெழுத்துப் போடுவதற்காக ஹெட் கிளார்க்கின் மேசையை நோக்கிப் போனார்.

ரங்கநாதனின் மேசையில் நாலைந்து பேர் கூடி நின்றார்கள். காஷியர் கனகசபை, ''ரொம்பப் பிரமாதமாக இருக்கப்பா! எங்கே வாங்கினே?'' என்று விசாரித்துக் கொண்டிருந்தார். அவர் கையில் அழகான பேனா ஒன்று இருந்தது.

''இருநூறு ரூபாய் சம்பளக்காரன் எண்பது ரூபாய்க்குப் பேனா வாங்க முடியுமா? எல்லாம் மாமனார் கொடுத்தது!'' என்றான் ரங்கநாதன். அவன் புதிதாகக் கல்யாணமானவன். மாமனார் வசதியானவர். பெண்ணும் சுமார்.

''உனக்கென்னப்பா, கொடுத்து வைச்ச மகராசன்! நம்மைச் சொல்லு!'' என்று அலுத்துக் கொண்டார் காஷியர்.

நாராயணன் எட்டிப் பார்த்தார். ''எங்கே பார்க்கலாம். எண்பது ரூபாய்க்கு அப்படி என்ன பேனா?'' என்று கைநீட்டினார்.

புத்தம் புதிய பார்க்கர் பேனா. பளபளவென்று பொன் நிறத்தில் மின்னியது.

''எழுதிப் பார்க்கலாமா?''

''நாங்கள் எல்லோருமே அந்தப் பேனாவால்தான் கையெழுத்துப் போட்டோம். நீங்களும் போட்டுப் பாருங்கள்.''

நாராயணன் பேனாவை எடுத்துக் கொண்டு ஹெட் கிளார்க்கின் மேசைக்குப் போனார்.

''நாளைக்குப் பெரியவர் வருகிறாராம். கணக்கெல்லாம் அப்டுடேட்டாக இருக்கணுமாம். எவ்வளவு நேரமானாலும் இருந்து முடிச்சுட்டுப் போகச் சொன்னார் மானேஜர்'' என்று ஹெட் கிளார்க் அறிக்கை விட்டார்.

நாராயணனுக்கு எரிச்சலாய் வந்தது. பிரசவத்துக்கு வந்திருந்த மூத்த மகளைச் சாயங்கால வண்டியில் புருஷன் வீட்டுக்கு அனுப்ப வேண்டியிருந்தது. நாலு மணிக்கே பெர்மிஷன் போட்டு விட்டுப் போகலாம் என்று வந்தால், இன்றைக்குப் பார்த்து நிறைய வேலை இருக்கிறதே!

எரிச்சலோடு கையெழுத்துப் போட்டு விட்டுத் திரும்பினார்.

இதற்குள் பத்து மணி அடிக்கவே, அவரவர்கள் சீட்டுக்குப் போனார்கள். நாராயணனும் பேனாவைக் கொடுத்து விட்டுத் தமது மேசைக்குப் போனார்.

கால் மணி நேரம் கழிந்தது.

அட்டெண்டர் வந்து நின்றான். ''காஷியர் சார் உங்ககிட்டப் பேனா வாங்கிட்டு வரச் சொன்னார்.''

''பேனாவா! எந்தப் பேனா?''

''அதான், நம்ம ரங்கநாதன் சாரோட பார்க்கர் பேனா!''

''அதைத்தான், கையெழுத்துப் போட்டுட்டு அப்பவே திருப்பிக் கொடுத்துட்டேனே!'' என்று நாராயணன் தாமே எழுந்து காஷியரிடம் போனார்.

''ஏன் சார், நான்தான் பேனாவை உடனேயே கொடுத்துட்டேனே!''

''என் கிட்டேயா! நீங்க பேனாவை வாங்கிட்டுப் போனதுமே நான் மேசைக்குப்போய் விட்டேன். கையெழுத்துப் போட்டுட்டு நீங்க திரும்பி வந்ததையே நான் பார்க்கல்லியே! ஒருவேளை ரங்கநாதன் கிட்டேயே கொடுத்துட்டீங்களா?'' என்று கேட்டார் காஷியர்.

''அப்படித்தான் இருக்கும்'' என்று நாராயணன் ரங்கநாதனிடம் ஓடினார்.

அவனும் கையை விரித்தான். ''கையெழுத்துப் போட்ட பிறகு நீங்க இங்கே வரவேயில்லையே, சார். அப்படியே உங்க சீட்டுக்குப் போயிட்டீங்களே!''

''வழியிலே யாரோ கை நீட்டிக் கேட்டாங்க. கொடுத்திட்டேன்.''

''யார் அது?''

நாராயணன் ஞாபகப்படுத்திப் பார்த்தார்.

சாயங்காலம் பெர்மிஷன் கிடைக்காது என்ற எரிச்சலில் வேகமாகக் கையெழுத்துப் போட்டுவிட்டுத் திரும்புகிறார். குறுக்கே ஒரு கை நீண்டு பேனாவைக் கேட்கிறது. அவர் கொடுத்து விட்டுத் தமது சீட்டுக்குப் போகிறார். ஆனால், அந்தக் கை யாருடையது? அதுதான் நினைவில் இல்லை. உண்மையில், அவர் அந்த முகத்தையே பார்க்கவில்லை. உரிமையோடு கை நீட்டவும், தம்மிடம் பேனா கொடுத்த காஷியர்தான் கேட்கிறார் என்ற எண்ணத்தில் முகத்தைப் பார்க்காமலேயே கொடுத்து விட்டார்.

'சே! என்ன ஒரு ஆப்சென்ட் மைண்ட்! சோம்னம்புலிசம் பிடித்தவன் போலக் காரியம் செய்துவிட்டு இப்படி விழிக்க வேண்டியிருக்கிறதே! கர்மம்!' என்று தலையில் அடித்துக் கொண்டவருக்குப் பேனாவின் விலை எண்பது ரூபாய் என்பது நினைவு வந்தது. 'ஐயோ! இருக்கிற கஷ்டம் போதாதென்று இது வேறு தண்டமா!'

வெறி பிடித்தவர் போல் வேகமாக ஒவ்வொரு மேசையாகச் சென்று எல்லாரிடமும் கேட்டார்.

''சார், அந்தப் பேனாவை உங்ககிட்டேயா கொடுத்தேன்?''

சிலர் கையை விரித்தார்கள்; சிலர் குறுக்காகத் தலையசைத்தார்கள்; சிலர் அனுதாபப்பட்டார்கள். ஒருவராவது நல்ல வார்த்தை சொல்லவில்லை.

நாராயணனுக்குப் பைத்தியம் பிடித்தது போலாகி விட்டது. பதினைந்து நிமிஷங்களுக்கு முன்புதான் நடந்த நிகழ்ச்சி! அவரே பங்கு கொண்ட நிகழ்ச்சி! அதில் அவரோடு பங்கு கொண்டவர் யார் என்று தெரியவில்லை! அவர் மூளையைக் கசக்கிக் கொண்டார். சூன்யம்தான் மிஞ்சியது.



காஷியர் எழுந்து வந்தார். ''ஞாபகம் வந்ததா, சார்?''

''இல்லியே! என் பலவீனத்தைத் தெரிந்து கொண்டு பேனாவை அமுக்கப் பார்க்கிறார்கள்! நான் ஏழை. இப்போதுதான் மகள் பிரசவத்துக்கு நிறையச் செய்துவிட்டு நிற்கிறேன்'' சொல்லும் போதே அவர் கண்கள் கரந்து விட்டன.

''எல்லோரையும் கேட்டு விட்டீர்களா?''

''பியூன்களைக்கூடக் கேட்டு விட்டேன்.''

''நம்ம சுந்தரத்தைக் கேட்டீர்களா?''

''அவர்தான் ஆபீசுக்கே வரவில்லை போல் இருக்கிறதே!''

''வந்து கையெழுத்துப் போட்டுவிட்டு, ஆபீஸ் விஷயமாக வெளியே போயிருக்கிறார்.''

நாராயணன் கை கூப்பினார். ''கடவுளே, பேனா அவரிடம் இருக்கணும்!''

ஒரு மணிக்கு எல்லோரும் சாப்பிடக் கூடினார்கள். நாராயணன் மட்டும் ஒரு மூலையில் இடிந்து போய் உட்கார்ந்திருந்தார்.

காஷியர் எழுந்து நின்றார். ''யாரும் சாப்பிட வேண்டாம். அநியாயமா இப்படி ஒரு மனுஷனைப் பதற வச்சுட்டு நாம் சாப்பிடறது நல்லாயில்லே. எல்லாரும் ஒரு நிமிஷம் யோசனைப் பண்ணிப் பாருங்க. நமக்குள்ளே யாரோ ஒருத்தர்தான் நாராயணன் சார் கிட்டப் பேனா வாங்கியிருக்கோம். கொடுத்தவருக்கு ஞாபகமில்லேங்கறதுக்காக வாங்கினவர் அதை அமுக்கிடறது மனுஷத்தனமில்லே. கீழே கண்டெடுக்கிற பொருளை நாமே வச்சுக்க ஆசைப்படறது இயற்கை. ஏன்னா, அதனாலே நஷ்டப்படறது யாருன்னு நமக்குத் தெரியாது. ஆனா, இது அப்படியில்லே. நஷ்டப்பட்டறது நாராயணன் சார்தான்னு நல்லாத் தெரியறது. தெரிஞ்சும் அந்தப் பிள்ளைக் குட்டிக்காரரை நஷ்டப்படுத்தறது மகா பாவம்! நாமெல்லாம் படிச்சவங்க; ஒரு குடும்பத்தை நிர்வகிக்கிறதிலே உள்ள கஷ்டம் தெரிஞ்சவங்க; பள்ளிக்கூடத்துப் பசங்க மாதிரி கேவலமா நடந்துக்கப்படாது. எல்லாரும் சேர்ந்து, பேனா கிடைக்கிறதுக்கு வழி செய்தாகணும்.''

யாரும் பேசவில்லை.

இந்தச் சமயத்தில் சுந்தரம் வந்து சேர்ந்தான்.

நாராயணன் ஆவலாக, ''காலையிலே உன் கிட்டே ஒரு பேனா கொடுத்தேனா?'' என்று கேட்டார்.

''இல்லையே சார், ஏன்?''

கடைசி நம்பிக்கையும் போய் விட்டது. நாராயணன் அழாத குறையாக, நடந்ததைச் சொன்னார்.

சுந்தரம் சிரித்துக் கொண்டே, ''உண்மை யிலேயே உங்களுக்கு நினைவில்லையா?'' என்று கேட்டான்.

''இல்லையே!''

எல்லாரையும் நிதானமாக ஒரு பார்வை பார்த்தான் சுந்தரம். பிறகு, ''உங்களுக்குத் தான் நினைவில்லையென்றால், வாங்கினவருக் குமா மறந்து போகும்? ஆனால், நீங்கள் பேனாவைக் கொடுத்த போது நான் பார்த்துக் கொண்டுதான் இருந்தேன்!'' என்றான்.

சூழ்நிலையில் ஒரு சுவாரஸ்யம் தட்டியது.

''யாரிடம் கொடுத்தேன்?'' என்றார் நாராயணன்.

''நான் ஆபீஸில் இருந்திருந்தால் அப் போதே சொல்லியிருப்பேன். ஆனால், இப் போது விவகாரம் ஒரு மாதிரியாக உரு வெடுத்து விட்டது. இனி நான் பெயரைச் சொன்னால் அவருக்கு அவமானம்! கொடுத் தவருக்கு ஞாபகமில்லை; வேறு யாரும் பார்க்க வில்லை என்ற தைரியத்தில் அவர் சபலப்பட்டு விட்டார். இப்போதே அவரைச் சோதனை யிட்டுப் பேனாவைக் கைப்பற்ற என்னால் முடியும். அவர் நாராயணன் சாரிடம் கை நீட்டிப் பேனா வாங்கியதை என் கண்களால் பார்த்தேன். ஆனால், சபலப்பட்டதற்காகவே அவரைத் திருடனாக்கிவிடக் கூடாது. அவருக் கும் ஒரு சான்ஸ் கொடுப்போம். இப் போது ஒவ்வொருவராக நாராயணன் சாரு டைய குப்பைக் கூடைக்குள் கையை விட்டு விட்டு வர வேண்டியது. கடைசியாக நாரா யணன் சார் போய்ப் பார்க்கும் போது அங்கே பேனா இருந்து விட்டால், என் ஒரே மகன் மீது ஆணையாக, அவர் பெயரை வெளியிட மாட்டேன். பேனா இல்லையோ, பெயரைச் சொல்லி விடுவேன். நான் சொன்னவுடன் நாராயணன் சாருக்கு ஞாபகம் வந்து விடும்!''

எல்லாரும் அவன் ஏற்பாட்டிற்குச் சம்ம தித்தார்கள்.

கடைசியில் நாராயணன் போய்க் குப்பைக் கூடையைக் கவிழ்த்து ஆவலாகக் கிளறிய போது, அங்கே பேனா இருந்தது!

அன்று மாலை, சுந்தரத்தோடு ஓட்டலில் காபி சாப்பிட்டுக் கொண்டிருந்த போது நாராயணன் வெகு ரகசியமாகக் கேட்டார்.

''என்னிடம் பேனா வாங்கிய அயோக்கியன் யார், சுந்தரம்?''

சுந்தரம் தலையில் அடித்துக் கொண்டான். ''வேறு யார், நான்தான்! கை நீட்டினேன்; பேனாவைக் கொடுத்து விட்டுப் போனீர்கள். நான் கையெழுத்துப் போடும் போது ஹெட் கிளார்க் என்னை அவசரமாக பிராஞ்சு ஆபீசுக்குப் போய் வரச் சொன்னார். பேனா வைக் கொடுக்க மறந்து விட்டுப் போய் விட்டேன். நான் திரும்பி வருவதற்குள் இங்கே ஒரு பெரிய ஸீனே உருவாகியிருந்தது. காஷியரின் உருக்கமான பேச்சைக் கேட்டுக் கொண்டேதான் வந்தேன். இந்த நிலையில் பேனா என்னிடம் இருப்பதாகச் சொன்னால், எல்லாரும் என் மேல் பாய்வார்கள், 'உங்கள் மறதிக்காக நாங்கள் திருட்டுப் பட்டம் வாங்கு வதா?' என்று. அதனால்தான் அப்படியொரு ஏற்பாடு செய்தேன். எவனோ ஒரு திருடன் மனம் திருந்தி விட்டதாக எல்லாரும் நினைத் துக் கொண்டிருக்கிறார்கள். அப்படியே இருக் கட்டும். நீங்களும் நானும் இனிமேல் நம் ஞாபக சக்தியை வளர்த்துக் கொள்ள முயற்சி செய்வோம்!'' என்றான்.

---

ருஷ்யச் சிறுகதை

## ஆட்டின் நடுக்கம்!

முன்னொரு காலத்தில் ஒரு கொடுங்கோலரசன் இருந்தான். ஒரு குற்றமும் செய்யாத ஓர் இளைஞனை அவன் சிறையில் அடைத்து விட்டான்.

இளைஞனை விடுதலை செய்யும்படி அவனது உற்றார் உறவினர்கள் அரசனிடம் கெஞ்சினர்.

''ஒரு நிபந்தனையின் பேரில் அவனை விடுதலை செய்வேன்'' என்று அரசன் கூறினான்.



இளைஞனைத் தன் முன்னால் கொண்டு வருமாறு ஆணையிட்டான். ''இளைஞனே, கேள். உன்னிடம் ஓர் ஒல்லியான செம்மறியாட்டையும், அதற்கு வேண்டிய ஒரு மாதத் தீனியையும் தருவேன். ஒரு மாதமானதும் அதை எடை போட்டுப் பார்ப் பேன். இன்று இருப்பது போல் ஆட்டின் எடை இருக்க வேண்டும். கொஞ்சமும் அதிகரிக்கக்கூடாது. ஆட்டின் எடை கூடினால் உன் தலையை வெட்டி எறிந்து விடுவேன்.''

இந்த நிபந்தனைக்கு இளைஞன் சம்மதித்தான். அரண்மனையின் ஒரு மூலையில் அவனுக்கு இடம் ஒதுக்கப்பட்டது.

அரசனின் ஆணையை நிறைவேற்ற முடியாது என்பதை அவன் விரைவில் உணர்ந்தான். வருத்தத் துடன் வெளியே சென்றான். அங்கு ஒரு கூனல் கிழவனைக் கண்டான். தன் நிலையைக் கூறினான்.

''மகனே, வருந்தாதே! இதற்கு ஒரு வழி இருக்கிறது. ஓர் ஓநாயைப் பிடித்து ஆட்டின் முன்னால் கட்டிவிடு. ஆடு எவ்வளவு தீனி தின்றாலும் பயத்தினால் அதன் எடை அதி கரிக்காது'' என்று அந்தக் கிழவன் கூறினான்.

இளைஞன் அப்படியே செய்தான். தனது ஜன்மப் பகைவனான ஓநாயைக் கண்டு ஆடு நடுங்கியது. அது அரை மனத்துடன் தீனியைத் தின்றது. எனவே அதன் எடை கூடவில்லை.

ஒரு மாதம் கழிந்தது. அரசன் ஆட்டை எடை போட்டுப் பார்த்தான். ஆட்டின் எடை கூடவில்லை, எனவே இளைஞனை விடுதலை செய்தான்.

# சேரமான் காதலி

### அத்தியாயம் 13

## காதலும் அரசியலும்

சொந்த அரண்மனையிலேயே குற்றவாளி போல் நிற்க வேண்டிய நிலை சேரமானுக்கு ஏற்பட்டது. வந்ததும் வராததுமாக இந்தத் தாக்குதலை அவர் எதிர்பார்க்கவில்லை.

ஏதோ நீண்ட நாட்களாக எதிர்பார்த்த ஒன்றைப் போலவும், நெடுங்காலமாக நடந்து வந்த நிகழ்ச்சிக்கு முற்றுப்புள்ளி வைப்பது போலவும் நாராயண நம்பூதிரி பேசுகிறாரே!—செய்தி அவ்வளவு வேகமாகப் பரவி விட்டதா?

இயற்கை எவ்வளவு விரைவாக அவர்களைச் சேர்த்து வைத்ததோ, அவ்வளவு விரைவாகவே செய்தியையும் சொல்லியிருக்கிறது.

நின்று நிதானித்து, தீர்க்க யோசித்து திட்டமிட்டுச் செயல்படுத்தும் சேரமான், திட்டமில்லாமலே சிக்கிக் கொண்ட கூண்டுக்குள், கடும் புலி என நின்று கொண்டிருந்தார்.

குற்றமோ குற்றமில்லையோ சம்பந்தப்பட்டவர்கள் பதில் சொல்ல முடியாத சூழ்நிலை அது.

ஆயினும் சேரமான் பதில் சொன்னார்.

''இது என் அரண்மனை. காவலரும் கணக்காயரும், புரோகிதரும் சேனைத் தலைவரும் இங்கே தங்குவதற்கு எவ்வளவு உரிமை உண்டோ அவ்வளவு உரிமை இவளுக்கும் உண்டு.''

நாராயண நம்பூதிரி சிரித்தார்.

''உண்டு. ஆனால் வைதிக சமயத்தின் வாசற்படியை பிற சமயத்தவர் மிதிக்கும் போது சமய மாற்றத்தை நான் எதிர்பார்க்கிறேன்.''

''நல்லது. ஆனால் யூஜியானிடம் நீங்கள் அதை எதிர்பார்க்கவில்லையே!''

''யூஜியான் இந்த மாளிகைக்கு வரவில்லையே!''

''மறைத்து வைக்கக் கூடிய மனைவியாக இவளை நான் கருதவில்லை. இது இயற்கை கொடுத்த பந்தம். நான் எங்கே இருக்கிறேனோ அங்கேதான் இவளும் இருக்க முடியும்.''

''அப்படி இருந்தால் ... சேரமான்! காதல் அரசியலாக மாறுவதற்கு அதுவே போதுமான காரணமாகி விடும்.''

''எந்தக் காதலில் அரசியல் குறுக்கிடாமல் இருந்தது?''

''இத்தனை காதலிகளைச் சேரநாடு எப்போது கண்டிருக்கிறது?''

''வரலாறு புதுப்பிக்கப்படுகிறது.''

''அதற்குத்தான் இப்போது அணை கட்டப்படுகிறது.''

''மீண்டும் ஒருமுறை நான் ஏமாற மாட்டேன்.''

''இப்போது ஏமாந்து விட்டதே போதும் என்கிறீர்களா....''

''தம்பிரான் சுவாமி! விரும்பியோ விரும்பாமலோ இந்த விபத்து நடந்து விட்டது. சைவத்தின் பாதங்களில் கிடந்த என்னை வைணவத் திருமால் தன் பாற்கடலுக்கு அழைத்தார். அன்று எனது பூர்வ ஜன்மம் பற்றி ராஜசேகர சுவாமி சொன்னது பொய். ஆனால் அராபிக் கடலும் ராஜ பல்லவத் தீவும் சொல்லிவிட்ட என் பூர்வஜென்மக் கதை மெய். தளிர்விடும் முன்பே கனி விட்ட மரம் போல், சந்தித்த நிலையிலேயே மணம் முடிக்க நேர்ந்தது தெய்விக பந்தம்.''

''ஓகோ! மணமும் முடிந்து விட்டதா?''

''அதை ராஜபல்லவத் தீவின் நாக தேவதையிடம்தான் கேட்கவேண்டும்.''

''நான் சொன்னது போன்ற கதைகளையே எனக்கும் சொல்கிறீர்களா?''

''துரதிருஷ்டவசமாக இதற்கு இரண்டே சாட்சிகள் உண்டு. ஒன்று

கண்ணதாசன்



நான்; மற்ருென்று தேவதை. தேவதை இங்கு வர முடியாதென்பதால் நான் சொல்வதைத்தான் நீங்கள் நம்ப வேண்டும்.''

''நான் நம்புவேன்; நாடு நம்பாதே!''

''தம்பிரான் சுவாமியை விட்டு விட்டுத் தனியாக இயங்குகிறதா நாடு?''

''நாட்டில் இருப்பது மந்தைகளல்ல; மக்கள்.''

''மக்கள் பெரும்பாலும் மந்தைகளே! ஓட்டுகிறவன் காட்டிலே ஓட்டிஞல் இலைகளைச் சாப்பிடுகின்றன; கடலிலே ஓட்டிஞல் விழுந்து சாகின்றன.''

''அந்தத் தைரியம்தான், பட்டத்து ராணியைப் பட்டினி போட்டு விட்டு, பக்கத்து ராணிகளுக்கு உணவு ஊட்டுகிறது; புரிகிறது எனக்கு.''

''தம்பிரான் சுவாமி! நான் என் வசத்திலில்லை. களைத்துப் போய் வந்திருக்கிறேன். என்னை ஓய்வெடுத்துக் கொள்ள அனுமதியுங்கள்.''

''தங்களுக்கு என் அனுமதி தேவை இல்லை!''

''சலிமா....?''

''அவர்கள் இல்லத்திலேயே இருக்கட்டும்.''

''அவளை அவர்கள் இல்லத்தில் சேர்க்க மாட்டார்கள்.''

''சொந்த மாளிகையே சேர்க்காத போது இந்த மாளிகை என்ன சத்திரமா?''

சேரமான் ஆத்திரமடைந்தார்.

''தம்பிரான் சுவாமி!'' என்று சத்தமிட்டார்.

நாராயண நம்பூதிரி அதற்கும் ஒரு படி மேலே போய், ''யார் அங்கே!'' என்று ஓங்கி குரல் கொடுத்தார்.

நான்கு காவலர்கள் வந்து நின்ருர்கள்.

''இவளைச் சிறையிலிடுங்கள்......!'' என்று உத்தரவிட்டார், நம்பூதிரி.

''முடியாது! யாரும் அவளை நெருங்காதீர்கள்!'' என்ருர் சேரமான்.

''நான் கூடவா...?'' என்று உள்ளே நுழைந்தான் தளபதி மானீச்சன்.

''மானீச்சன்....'' என்று கத்திஞர் சேரமான்.

''இல்லை. இப்போது தளபதி'' என்ருன் மானீச்சன்.

''அவள் என் மனைவி'' என்ருர் சேரமான்.

''இனி அது, நாட்டை யாளும் பிரதான நம்பூதிரிகள் சபையில் வைக்கப்பட வேண்டிய விஷயம்.''

''நம்பூதிரிகள் சபை என் சொந்த வாழ்க்கையையும் கட்டுப்படுத்த முடியாது.''

''அரசரின் எந்த வாழ்க்கையையும் கட்டுப்படுத்துவதற்கே சபைகள் இயங்கு கின்றன.''

''நீயுமா எனக்கு எதிரி?''

''இல்லை. நியாயமே உங்கள் எதிரி.''

''எனக்கு என் மனச்சாட்சியே நியா யம்.''

''மற்ற சாட்சிகள் பொய் சொல்லும் போதுதானே மனச்சாட்சியைக் கேட்க நேரிடும்!''

''வரை முறையையும் மீறி நீங்கள் ஆதிக்கத்தைச் செலுத்தினால், என் பிணத்தைத்தான் பார்ப்பீர்கள்.''

''இதைவிட அது உத்தமம்.''

''மானீச்சன்....''

''உங்கள் மைத்துனனும் கூட!''

''என் வாழ்வில் உங்களுக்கென்ன அவ்வளவு அக்கறை?''

''அதில் எங்கள் வாழ்வும், நாட்டின் வாழ்வும் பின்னிக் கிடப்பதால். பட்டத் துக்கோர் தலைமுறை இல்லாத நாட்டுக் காக உங்களைக் காப்பது எங்கள் கடமை.''

''சலீமா அதை எப்படிக் கெடுத்து விடுவாள் என்று நினைக்கிறீர்கள்?''

''சமயம் குறுக்கிடுகிறதே, என்ன செய்ய?''

''அவள் ஒரு சைவப் பெண்ணாகமாறி விட்டால்.....''

''அந்தப்புரத்தில் ஒருத்தியாக அங்கீ கரித்து விடுகிறோம்!''

''அப்படியே நடக்கும். அதுவரை அவள் இங்கேயே இருக்கட்டும்.''

இப்போது நாராயண நம்பூதிரி குறுக்கிட்டார்.

''அதுதான் நடக்காது. விதையைப் போடும் போதே விளைச்சலை நான் அறிவேன். என்ன விளைகிறது என்று



தெரியும் வரை அவள் சிறைச்சாலையில் தான் இருக்க வேண்டும்.'' — என்று கூறிய அவர், மானிச்சனைப் பார்த்தார்.

மானிச்சன் காவல்காரர்களைப்பார்த்தான்.

காவலர்கள் சலீமாவைக் கைது செய்து அழைத்துச் செல்ல முயன்றார்கள்.

தடுக்க முயன்றார் சேரமான். வாளை உருவி அவரைத் தடுத்தான் மானிச்சன்.

''அவரை விட்டு விடுங்கள்'' என்று ஒரு குரல் கேட்டது.

எல்லோரும் திரும்பிப் பார்த்தார்கள். அங்கே பத்மாவதி நின்றாள். பக்கத்தில் தரங்கிணி நின்றாள்.

''அவருக்கு எது விருப்பமோ, அதுவே என் விருப்பம். அவரது இஷ்டப்படி வாழ அனுமதியுங்கள்'' என்றாள் பத்மாவதி.

''மகாராணி! இது அந்தப்புரத்தோடு முடிகின்ற ஒன்றல்ல. எந்தப் புறத்திலும் பதில் சொல்ல வேண்டியவன் நம்பூதிரி. சேர நாட்டை எந்த மதம் ஆள்வது என்ற பிரச்னை நாளை வரப் போகிறது.. அதற்கொரு முடிவை இப்போதே நான் காணா விட்டால், நாளைய வஞ்சி மக்கள் என்னைத் தூற்றுவார்கள். மகமதியர்களின் கட்டுப்பாடு எனக்குத் தெரியும். ஒரு கலவரத்திற்கும், சமய மாற்றத்துக்கும் அணை போட்டவே நான் இதில் குறுக்கிடுகிறேன். என் உயிரே போயினும் இதில் இருந்து நான் பின்வாங்க மாட்டேன். தயவு செய்து உள்ளே போங்கள்'' என்றார் நாராயண நம்பூதிரி.

மானிச்சனும், காவலர்களும் சலீமாவை அழைத்துக் கொண்டு போய் விட்டார்கள்.

''சலீமா...!'' என்று கதறிய சேரமான் மூர்ச்சையுற்றார்.

பத்மாவதியும், தரங்கிணியும் ஓடி வந்து அவரைக் கைத்தாங்கலாக எடுத்தார்கள்.

ருத்திராட்சத்தை ஓங்கித் தட்டியபடியே நாராயண நம்பூதிரி காவலர்களுக்கு ஏதோ ஆணையிட்டு விட்டு, அரண்மனையில் இருந்து வெளியேறினார்.

என்னதான் அரண்மனையில் நடந்தாலும் ரகசியம் வெளியில் போய்விடாதா?

செய்தி நகருக்குள் பரவிற்று.

சேரமானைப் பற்றிய அவதூறுகள் கிளம்பின.

''ஒன்று மாற்றி ஒன்று என்று பெண்கள் விஷயத்திலே சிக்கிக் கொள்கிறாரே....'' என்று சிலர் பேசிக் கொண்டார்கள்.

அகமதுவும் மகமதுவும் தங்கியிருந்த வீட்டில் பெரும் கூட்டம் கூடி விட்டது.

''ஜெபுன்னிஸா இறந்து விட்டாளாம்....''

''அரசரும் சலீமாவும் மட்டும் தனியாக வந்தார்களாம்....''

''தீவிலேயே திருமணம் முடிந்து விட்டதாம்....''

''ஓரிரவு கூட ஒன்றாக இருந்தார்களாம்....''

''அரசர் உயிரையே வைத்திருக்கிறாராம்....''

''நம்பூதிரிகள் சபைத் தலைவர் மிகக் கடுமையாக இருக்கிறாராம்....''

— இந்தச் செய்திகள் அகமது, மகமது, பாத்திமா ஆகியோர் நெஞ்சில் சம்மட்டியால் அடிப்பது போல் இருந்தன.

அவர்கள் குழம்பினார்கள்; கலங்கினார்கள்.

ஒருவன் ஓடோடி வந்து, ''சலீமாவைச் சிறையில் அடைத்து விட்டார்கள்'' என்றான்.

அவர்கள் குரலெடுத்து அழுதார்கள்.

மற்ற தெருக்களைவிட இந்தச்செய்தி அரசியல் வடிவம் எடுத்தது மகமதியர் தெருவிலும், யூதத் தெருவிலுமே.

ஒவ்வொரு மகமதியரும் தங்கள் வீட்டிலேயே ஒரு தவறான நிகழ்ச்சி நடந்து விட்டதுபோல் துடிதுடித்தார்கள்.

தொழுகை மண்டபத்தில் ஒவ்வொருவராகக் கூடத் தொடங்கினார்கள்.

(தொடரும்)



## திருடன்! திருடன்!

பம்பாயில் ஒரு பிச்சைக்காரி தன் டிரான்ஸிஸ்டர் ரேடியோவைப் பாடச் செய்து ஒரு செடி அருகில் வைத்துவிட்டு தான் பக்கத்தில் ஒளிந்து கொள்கிறாள். யாராவது அதை எடுக்க முயன்றால் 'திருடன் திருடன்' என்று கத்தி அவனை விரட்டி விடுகிறாள். இந்த வேடிக்கையை அவள் அடிக்கடி செய்வதைக் கேள்விப்பட்ட 'டைம்ஸ் ஆஃப் இந்தியா' தன் நிருபரை அனுப்பி அந்தப் பிச்சைக்காரியைப் பேட்டி கண்டது. அவள் கூறிய காரணம்: ''நாம் நினைப்பதற்கு மேலாக நாட்டில் எத்தனை திருடர்கள் இருக்கிறார்கள் என்று கண்டுபிடிக்கிறேன்!''

— பாவி

## ஸ்ரீ காளிகா பரமேஸ்வரி -
## ஸ்ரீ காமாக்ஷி அம்மன்

குடந்தை கீழ்க்கோட்டமென்னும் ஸ்ரீ நாகேஸ்வரர் ஆலயத்திற்கு கீழ்வலத்தில் அமைந்துள்ளது. முன் பொருகால் ஸ்ரீ நாகேஸ்வரரை வழிபட வந்த சோழ அரசனை அவ்வாலய திருப்பணி வேலை பூர்த்தி செய்த பிறகு ஸ்ரீ காமாக்ஷியையும் வழிபட அழைத்தனன். மன்னன் உதாசீனப்படுத்திச் சென்றான், பூர்வ வினையால் அரசன் பெரும் நோயால் வருத்தமுற்றபோது ஸ்ரீ காளியம்மன் சோழ அரசனின் சொப்பனத்தில் தோன்றி ''ஆதிவாரத்தில் ராகு காலத்தில் சுமங்கல்ய ஆராதனை செய், நோய் நீங்கும்'' என்று சொல்லி மறைந்தாள். அவ்வாறே ஆதி வாரந்தோறும் மகாமகக் குளத்தில் நீராடி ராகு காலத்தில் சுமங்கல்ய ஆராதனை செய்து தேவியை வழிபட்டு நோய் நீங்கப் பெற்றான்.

இப் புனித ஆலயம் பழுதுபட்டுள்ளதைப் புதுப்பிக்கவும் ஸ்ரீ காளிகா பரமேஸ்வரி ஸ்ரீ காமாக்ஷி சமேத ஸ்ரீ ஏகாம்பரநாதர் சன்னதிகளையும் செப்பனிட்டு அஷ்டபந்தன மஹா கும்பாபிஷேகம் செய்விக்கவும் ஸ்ரீ அம்பிகையின் திருவையாலும் காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகளின் அனுக்ரஹத்தினாலும், திருவாவடுதுறை, தருமபுர ஆதீன கர்த்தர்களின் அருளாசியாலும் நிச்சயித்திருப்பதால் இதனைக் கண்ணுறும் அன்பர்கள் தங்களாலியன்ற பொருளுதவி செய்து ஸ்ரீ அம்பிகையின் திருவருளுக்குப் பாத்திரர்களாகும்படி கேட்டுக் கொள்கிறோம். நன்கொடை அனுப்ப வேண்டிய முகவரி:

**திரு கே. ராமச்சந்திரன்**
செயலாளர் & பொருளாளர்

திருப்பணிக் குழு, ஸ்ரீ காளிகா பரமேஸ்வரி ஸ்ரீ காமாக்ஷியம்மன் தேவஸ்தானம், நாகேஸ்வரர் கீழ வீதி, கும்பகோணம் (தஞ்சை மாவட்டம்)



வேத பண்டிட் T.T.D. திருமலை ஹில்ஸ் ஸ்ரீ P. V. அனந்தசயனம் அய்யங்கார் அவர்கள் குமாரன் செரஞ்சீவி **A. ராமதுரை** B. A.க்கும், திருமலை ஹில்ஸ் ஸ்ரீநிவாஸாச்சாரியர் அவர்கள்குமாரத்தி சௌ. **ஸீதா லக்ஷ்மி**க்கும் 21-1-77ல் திருச்சானூரில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது. ஏராளமான உறவினர்களும், நண்பர்களும் வருகை தந்து மணமக்களை வாழ்த்தினர்.

வாழ்க மணமக்கள்




யார் யாருக்கோ எதன் எதன் மேலோ மோகம் வரும். ஆனால் என் தர்மபத்தினிக்கு திடீரென்று பெருங்காயத்தின் மீது அளவுக் கதிகமாக மோகம் உண்டாயிற்று.

அதற்குக் காரணம் மூஞ்சூறு அண்ட் மூஷிகா பிராண்ட் பெருங்காயக் கம்பெனி யார் கொடுத்த விளம்பரம்தான்.

மூஞ்சூறு அண்ட் மூஷிகா பிராண்ட் பெருங் காயப் பாக்கெட் ஒவ்வொன்றிலும் ஒரு குறிப்பிட்ட எழுத்தை அச்சடித்துப் பெருங் காயத்தோடு சேர்த்து வைத்திருப்பார்கள். பெ, ரு, ங், முதலான எழுத்துக்கள் ஒவ் வொரு பாக்கெட்டிலும் ஒவ்வொன்றாகத் தனித் தனியாக இணைக்கப்பட்டிருக்கும். இந்த எழுத்துக்களையெல்லாம் திரட்டிப் ''பெருங்காயம்'' என்ற வார்த்தை வரும்படி யாக அமைத்து அந்த எழுத்துக்கள் இருந்த பாக்கெட்டுகளையும் இணைத்துக் கம்பெனிக்கு அனுப்ப வேண்டும். முதல் பரிசு — குடும்பத் தோடு 'காஷ்மீர்' இலவசப் பயணம். அத்தோடு காஷ்மீரில் தங்கவும், சுற்றிப் பார்க்கவும் கம்பெனியாரே ஏற்பாடு செய்வார்கள்.

இந்த விளம்பரத்தைப் பார்த்த அன்றி லிருந்தே என் மனைவி காஷ்மீர் பற்றிய கன வுகள் காண ஆரம்பித்தாள்.

மளிகைக்கடை நாடார் என்னை ஒருவித மாகப் பார்க்க ஆரம்பித்து விட்டார். பின் என்ன, ஒரு மனிதர் மூஞ்சூறு அண்ட் மூஷிகா பிராண்ட் பெருங்காயம், பத்து பாக்கெட் வேண்டும் என்று கேட்டால்?

பத்துப் பாக்கெட்டுகளையும் அவசரம் அவசரமாகப் பிரித்துப் பார்த்தோம். இந்தப் பொட்டலங்களில் மட்டும் 'பெருங்காயம்' கிடைத்து விடக் கூடாதா என்ற நைப் பாசையில்!

எல்லாவற்றிலும் 'ய' என்ற எழுத்து மட்டும் கிடைத்தது. இருந்தாலும் நாங்கள் சலிப் படையவில்லை.

மறுநாள் முதல் எங்கள் வீட்டுக்கு வருபவர்கள், விரோ திகள், நண்பர்கள், அக்கம்பக் கத்தில் இருப்பவர்கள், உறவி னர்கள் எல்லோரிடமும் மூஞ் சூறு அண்ட் மூஷிகா பெருங்கா யத்தையே வாங்குமாறு விண் ணப்பித்துக் கொண்டோம். அத்துடன், அவர்களை அந்தப் பெருங்காயத்தினுள் இருக்கும் அச்சிட்ட எழுத்தோடு அந்த உறைகளையும் எங்களிடம் தரு மாறு வேண்டிக் கொண்டோம்.

ஆபீஸ் நண்பர்களிடமெல் லாம் நான் மூஞ்சூறு அண்ட் மூஷிகா பிராண்ட் பெருங்கா யத்தைச் சிபாரிசு செய்யப் போக, ஆபீஸ் முழுவதும் நான் 'பார்ட் டைம் பிஸினஸ்' ஆகப் பெருங்காய வியாபாரம் செய்வதாக வதந்தி கிளம்பியது.

இந்த வதந்தி, தந்தி மாதிரி மானேஜர் காதுக்குப் போய் விட்டது. மானேஜர் என் னைக் கூப்பிட்டுச் சத்தம் போட்டார். நான் உண்மையை விளக்குவதற்குள் போதும் போதும் என்றாகி விட்டது. ஒருவழியாக நான் உண்மையை விளக்கி அவரை வழிக்குக் கொண்டு வருவதற்குள் என் பிராணன் போய் விட்டது. ஒரு வழியாக என் வழிக்கு வந்தவர் தாமும் போட்டியில் கலந்து கொள்ள விரும்புவதாகக் கூறி, என்னிடமே பணம் கொடுத்துப் பெருங்காயப் பாக்கெட்டுக்கள் வாங்கி வரப் பணித்தார்.

'பெருங்காயம்' எழுத்துச் சேர்க்க முடிந் ததோ இல்லையோ பெருங்காயப் பாக்கெட்



டின் பேரைச் சொல்லியே, மானேஜரிடம் இரண்டு மூன்று முறை பர்மிஷன் போட முடிந்து விட்டது!

பத்து நாட்கள் பறந்து ஓடி விட்டன. ஒரு வழியாக 'பெ ங் கா ய' சேர்த்து விட்டோம். அதற்கு நாங்கள் எங்கள் வீட்டில் மட்டுமே வாங்கிய பெருங்காய பாக்கெட்டுக்கள் சதத்தைத் தாண்டி விட்டன.

ஆனால் அந்த 'ரு', 'ம்' மட்டும் எங்கள் கையில் சிக்கியபாடில்லே.

எங்கள் வீடு முழுவதும் பெருங்காய மணம் கமழ்ந்தது. எந்தச் சமையல் என்றாலும் உப்பு, புளி, மிளகாயைக் காட்டிலும் பெருங்காயம் சற்றுத் தூக்கலாகவே இருக்கும்.

போட்டியின் கடைசித் தேதி நெருங்கவே எங்களுக்கு டிமிக்கிக் கொடுத்துக் கொண்டிருந்த 'ரு, ம்' இரண்டையும் தேட, ஆபீஸுக்கு ஒருவாரம் லீவு போட்டேன். கிரிக்கெட் மாட்சுக்குக் கிளம்புவது போல, டிபன், பிளாஸ்க், வெயிலுக்குத் தொப்பி, சகிதமாகத் தினமும் கிளம்பலானேன். நண்பர்கள் வீடு, உறவினர்கள் வீடு என்றெல்லாம் முற்றுகையிட்டேன். ஊஹும்.. எங்கு தேடியும் 'ரு,ம்' இரண்டும் அகப்படவேயில்லே.

இத்தனே நம்பிக்கை இழப்புக்குப் பிறகும் நம்பிக்கையோடு நண்பர் தியாகுவிடம் பேச்சுக் கொடுத்தேன். அன்றுதான் அவர் ரூ அண்ட் ரூ பெருங்காயம் ஒரு பாக்கெட் வாங்கினாராம். உள்ளே ஏதோ அச்சடித்த எழுத்துள்ள காகிதம் இருந்ததாம். அதை அவர் தம் இரண்டாவது கிளாஸ் படிக்கும் மகள் சுமதியிடம் கொடுத்து விட்டாராம்.

அவரை அப்படியே அந்தரத்தில் விட்டு விட்டு சுமதியைத் தேடி ஓடினேன். அவளைக் கெஞ்சிக் கொஞ்சி பூகோள நோட் புத்தகத்தில் 'ரு' இருப்பதைக் கண்டு பிடித்தேன். சுமதி அதை இலேசில் எடுத்துக் கொள்ள விட்டாளா? ஏக ரகளை பிடித்து விட்டாள். அப்பப்பா! அவளைச் சமாதானப்படுத்தி ஒரு வழியாக அந்த 'ரு'வைக் கைப்பற்றுவதற்குள் எனக்கு ஏற்பட்ட நஷ்டம் – நான்கு டப்பா மிட்டாய்கள், ஐந்து பஞ்சு மிட்டாய், இருபது ஸ்டிக்கர்கள்! யாருக்கும் தெரியாமல் இரண்டு 'கின்னு' உதைகள்!



அப்பா! இனி 'ம்' மட்டும்தான் பாக்கி! ஒரு பெருமூச்சு விட்டேன்!

அன்று மாலே நண்பன் ரகு வீட்டிற்கு சென்றிருந்த பொழுது 'ம்'மைப் பற்றிப் பேச்சு கொடுத்தேன்.

அதைக் கேட்ட ரகு, ''ராதா!'' என்று தன் மனைவியை அழைத்தான். ''ஆமாம், அன்னிக்கு ரூஅண்ட்ரூ அண்ட் ரூஷிகா பிராண்ட் பெருங்காயப் பாக்கெட் வாங்கிண்டு வந்தேனே அந்தப் பாக்கெட் எங்கே?'' என்று கேட்டான்.

''பெருங்காயத்தை எடுத்துண்டு, பாக்கெட்டைத் தெருவிலே இருக்கிற குப்பைத் தொட்டியிலே எறிஞ்சுட்டேனே...''

''அதிலே ஏதாவது எழுத்து இருந்ததா? ஒரு காகிதத்திலே பிரிண்ட் பண்ணியிருக்கும்'' என்று ஆர்வத்துடன் கேட்டேன்.

''அது என்னமோ தெரியலே...'' அலட்சியமாகக் கூறிவிட்டு ரகுவின் மனைவி சமையலைக் கவனிக்கச் சென்று விட்டாள்.

விடுவேனா நான்? தைரியமாகக் குப்பைத் தொட்டியைச் சரண் புகுந்தேன். அதன் உள்ளே இருந்த குப்பைக் காகிதங்கள்,– துணிகள், பாட்டில்கள், தகர டப்பாக்கள்





''என் அப்பா செய்த நல்ல காரியம்'' என்ற தலைப்பில் கட்டுரை எழுதச் சொன்னார்கள் வகுப்பில். ஒரு பையன் ரொம்ப சுருக்கமாக எழுதினான்: ''என் அம்மாவை மணந்து கொண்டது'' — சாகா - முத்து

என்று ஒவ்வொன்றாக வெளியே எடுத்துப் போட்டேன்.

ஒரே துர்நாற்றம். எத்தனை வருஷங்களாக இந்தக் குப்பைகள் குப்பைத் தொட்டியிலே இருக்கின்றனவோ? அதைப் பெருங்காயமாக நினைத்துக் கொண்டு, குப்பைத் தொட்டியை அலசி ஆராய்ந்தேன்.

அப்பா! கையெல்லாம் வலிக்க ஆரம்பித்து விட்டது. பாதித் தொட்டி காலியாகி விட்டது. ஏதோ ஒருவித உணர்வு உந்தவே, தலையைத் தூக்கிப் பார்த்தேன். அதிர்ந்தே போனேன். என்னைச் சுற்றி ஒரே கூட்டம். எல்லோரும் ஆச்சரியத்தோடு என்னைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்!

பின் என்ன, டெரிகாட் பாண்ட்டும், ஷர்ட்டும் அணிந்து கொண்டு ஒருவன் குப்பைத் தொட்டியை ஓரேயடியாக அலசிக் கொண்டிருந்தால் கூட்டம் கூடக் கேட்க வேண்டுமா?

அப்போது, நமக்குப் போட்டியாக ஒரு மனிதனா என்று எண்ணியோ என்னவோ, திடீரென்று ஒரு நாய் அந்தக் குப்பைத் தொட்டிக்குள் குதித்தது. எதையோ வாயில் கவ்விக் கொண்டது. என்னை முறைத்துப் பார்த்தவாறே தொட்டியிலிருந்து எகிறியது.

அந்த நாயின் வாயில், அது என்ன, மூ அண்ட் மூ பிராண்ட் பெருங்காயப் பாக்கெட் அல்லவா?

பாய்ந்தேன் அதன் மேல். அது ஓடியது. நானும் ஓடினேன்; அதன் வாயிலிருந்து பாக்கெட்டைப் பிடுங்கிய பின்தான் மூச்சே விட்டேன்!

ஆக்ரோஷமடைந்த நாய் உறுமியது. அதற்குப் பயந்து நான் ஓட நாயும் என்னை ஓடஓட விரட்டியது. பாண்ட், ஷர்ட் எல்லாம் குஞ்சலங்களாய்த் தொங்க நான் எப்படியோ வீட்டை அடைந்தேன்.

என் அலங்கோல நிலையை அலட்சியமாய்ப் பார்த்துவிட்டு மூ அண்ட் மூ பாக்கெட்டைப் பிடுங்கிக் கொண்டாள் தர்மபத்தினி.

பாக்கெட்டைப் பார்த்தவள் சந்தோஷத்தில் துள்ளினாள்.

''ஆஹா! கடவுள் கண்களைத் திறந்து விட்டார். இவ்வளவு கஷ்டங்களுக்கும் பலன் கிடைத்து விட்டது.

'ம்' கிடைத்து விட்டது.

மறுநாள் ''பெ ரு ங் கா ய ம்'' எழுத்துகளைச் சீராக ஒரு காகிதத்தில் ஒட்டி, அந்தந்த எழுத்துக்கள் இருந்த பெருங்காயப் பெட்டிகளையும் இணைத்து ஒரு கவரில் போட்டு, கோவில்கள் அனைத்திலும் கற்பூரம்கொளுத்தி வேண்டி வணங்கித் தபாலில் போட்டோம்.

இப்படியாகத்தானே என் மனைவியின் மூ அண்ட் மூ மார்க் பெருங்காயப் போராட்டம் இருபது நாட்களில் முடிந்தது.

ஆயிற்று. ஒரு மாதம் எப்படியோ ஓடி விட்டது. போட்டி முடிவைத் தபால் மூலம் அறிவிப்பதாக மூ அண்ட் மூ கம்பெனியார் அறிவித்திருந்ததால், தினமும் தபால்காரரை துளைக்கலானேன். எங்கள் தொல்லைபொறுக்க முடியாமல் அவர் எங்கள் தலையைக் கண்டால் ஓடி ஒளிய ஆரம்பித்தார்.

**வா**ராது வந்த மாமணியென அன்று தபால் வரவே, தபால்காரர் தைரியமாகத் தலையைக் காட்டினார்! அதுமட்டுமா? கூடவே ஒரு பார்சலையும் கொடுத்துவிட்டுச் சென்றார்.

பம்பாய்
திருமதி அவர்களுக்கு, 6-1-77

வணக்கம், தாங்கள் எங்களுடைய மூஞ்சூறு அண்ட் மூஷிகா பிராண்ட் பெருங்காயப் போட்டியில் கலந்து கொண்டதற்கு எங்களுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். இந்தப் போட்டியில் முதல் பரிசு பெறும் அதிர்ஷ்டசாலி திருமதி வத்சலா அவர்கள் கல்கத்தாவைச் சேர்ந்தவர். தாங்களும், திருமதி வத்சலாவும்தான் போட்டிக்குச் சரியான விடையை அனுப்பி யிருந்தீர்கள். தாங்கள் ''பெருங்காயம்'' என்று மட்டுமே எழுத்துக்களைச் சேர்த்து அனுப்பியிருந்தீர்கள். எங்களுடைய விளம்பரத்தில் அறிவித்திருந்தபடி திருமதி வத்சலா ''பெருங்காயம்.'' என்று சரியாக முற்றுப் புள்ளியும் சேர்த்து அனுப்பியிருந்தார். தாங்கள் முற்றுப்புள்ளியை அனுப்பத் தவறி விட்டீர்கள். முதல் பரிசு காஷ்மீர் பயணம் என்று மட்டுமே அறிவித்திருந்தோம். தாங்கள் ஏறக்குறைய சரியான விடையை அனுப்பியிருப்பதால் ஆறுதல் பரிசாக மூ அண்ட் மூ பிராண்ட் பெருங்காயப் பக்கெட்டுகள் பத்து அடங்கிய இரண்டு பெரிய டின்களை பார்சலில் அனுப்பியுள்ளோம்.

நன்றி, இப்படிக்கு
மூ அண்ட் மூ பிராண்ட்
பெருங்காயக் கம்பெனியார்

''அந்த முற்றுப்புள்ளியைச் சேர்த்து அனுப்பியிருந்தால்....?''

''இனிமேல் இதைப்பத்தி வாயைத் திறந்தா....'' மனைவி போட்டக் கூச்சலில் நான் என் பேச்சுக்கு அரைகுறையாகவே முற்றுப்புள்ளி வைத்து விட்டேன்.

அவளோ இந்த மாதிரிப் போட்டிகளில் கலந்து கொள்ளும் ஆசைக்கு முழுசாக முற்றுப்புள்ளி வைத்துவிட்டாள்.

என்றாலும், அவளுடைய இருபது நாள் மோகத்தின் பலன் —

சமையலறை அலமாரியில் ஏற்கனவே அடுக்கப்பட்டிருக்கும் அத்தனை மூ அண்ட் மூ பிராண்ட் பெருங்காயப் பாக்கெட்டுகளுடன் ஆறுதல் பரிசாக வந்த பெருங்காயப் பாக்கெட்டுகளும் சேர்ந்து மணம் பரப்பிக் கொண்டிருக்கின்றன.



# சிலம்புச் செல்வம்



ம.பொ.சி

மாதரி இல்லத்திலே கண்ணகியை விட்டுப் பிரிந்த கோவலன், மிகுந்த மனச் சோர்வுடன் மதுரை நகர வீதிகளில் நடக்கலானான்.

பல வீதிகளைக் கடந்து கடை வீதியில் சென்று கொண்டிருந்தான். அப்போது பொற் கொல்லர் நூறு பேர் பின்தொடர, உடம்பில் சட்டையணிந்து, கையில் சின்னஞ்சிறு கோல் ஒன்றைத் தாங்கி, தலைமைக் குரிய கம்பீர நடையுடன் பொற்கொல்லன் ஒருவன் கோவலன் எதிரே வந்து கொண்டிருந்தான்.

அவனைக் கண்ட கோவலன், 'இவன் அரண்மனைப் பொற்கொல்லனாக இருக்கலாம்' என்று அனுமானித்து, அவனை நெருங்கினான். இதற்கு முன்னர் கோவலனுக்கு அறிமுகமாகாதவன் பொற்கொல்லன். அப்படியிருந்தும், அவனையணுகி, 'மன்னனுடைய தேவிக்கு பயன்படத் தக்க சிலம்பு ஒன்று என் வசமுள்ளது. அதன் விலையை மதிப்பிட்டுக் கூற இயலுமோ?' என்று கேட்டான்.

கோவலன், பெண்களணியும் சிலம்பை முன்னர் விற்றறியாதவனாதலால், தன் மனைவியின் சிலம்பை விற்கப் புகுமுன் விலையை மதிப்பிட்டறிய விரும்பினான்.

பொற்கொல்லன், "அடியேன் அறியேன்" என்று கூறினான். அத்துடன் நில்லாமல், அவன் தன் இரு கைகளாலும் தொழுது, கோவலனைக் கும்பிட்டு,

"ஆயினும், வேந்தர் முடிமுதற் கலன்கள்
சமைப்பேன் யான்"

என்று, தான் அரண்மனைப் பொற்கொல்லன் என்று கூறி, தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டான்.

தான் அனுமானித்தது உண்மையாகி விட்டது கண்டு கோவலன் மகிழ்ச்சியடைந்தான். தன் கைவசமிருந்த கண்ணகி தேவியின் காற் சிலம்பினைப் பொற்கொல்லனிடம் கொடுத்தான்.

சிலம்பைப் பெற்ற பொற்கொல்லன் அதன் வேலைப்பாடுகளை யெல்லாம் நன்கு ஆராய்ந்தான். உள்ளிருந்து ஒலியெழுப்பும் மாணிக்கப் பரல்களையுடைய அச் சித்திரச் சிலம்பின் வேலைப்பாடுகளை யெல்லாம் பொய் சொல்வதையே தொழிலாகக் கொண்ட அப்பொற்கொல்லன் கண்டு மகிழ்ந்தான்.

கோவலனிடமிருந்து சிலம்பைப் பெற்ற பின் பொற்கொல்லன் அடைந்த அந்நிலையை இளங்கோவின் வாக்காலேயே அறிவோம் :

" மத்தக மணியொடு வைரம் கட்டிய
பத்திக் கோவணைப் பகம்பொன்குடைச்சூழ்
சித்திரச் சிலம்பின் செய்வினை யெல்லாம்
பொய்த்தொழிற் கொல்லன் புரிந்துடன்
நோக்கி"

கோவலன் எதிரே பொற்கொல்லன் வந்த போது, 'பொன்வினைக் கொல்லன்' என்று குலத்தொழிலின் பெயரால் அவனை அறிமுகப் படுத்திய இளங்கோ, இங்கு, 'பொய்த் தொழில் கொல்லன்' என்று கூறுகின்றார்.

சிலம்பின் வேலைப்பாடுகளை ஆய்ந்து பார்த்த பின்னர், "பாண்டியன் மனைவியான கோப்பெருந்தேவிக்கு அல்லாது வேறு யாருக்கும் பொருந்தாது" என்று கோவலனிடம் கூறினான் பொற்கொல்லன்.

" விறன்மிகு வேந்தற்கு விளம்பி
யான்வர, என்
சிறுகுடில் அங்கண் இருமின நீர்"

என்று கூறி, கோவலனைத் தன் இல்லத்தில் தங்கும்படி செய்து விட்டு, அரசனிடம் சென்றான் பொற்கொல்லன்.

கோவலன், சிலம்பின் விலை மதிப்பைக் கூறும்படிதான் கேட்டான். பொற்கொல்லனோ அரசனிடம் சிலம்பை விற்று வருவதாகவே கூறிவிட்டுச் சென்றான்.

பாவம்! கோவலன், உண்மையாகவே பொற்கொல்லன் பேச்சை நம்பி எமனுடைய குகை வாயில் போன்ற அவன் வீட்டு வாயிலில் நுழைந்து, அங்கு சிலம்புடன் தங்கலானான்.

அரண்மனைக்குச் சென்று கொண்டிருக்கும் வழியில்,

"கரந்து யான் கொண்ட காலணி ஈங்கு,
பரந்து வெளிப்படா முன்னம் மன்னற்குப்
புலம்பெயர் புதுவனிற் போக்குவன் யான்"

என்று நினைக்கலானான் பொற்கொல்லன். ஆம்;

"யான் கோப்பெருந்தேவியின் சிலம்பைக் களவாடிக் கொண்டது வெளிப்படுமுன், பாண்டி நாடு வந்துள்ள இப் புதியவனைக் கள்வனாக்கி விடுவேன்" என்று தன் மனத்துள் நினைத்தவனாய் அரண்மனை நோக்கிச் சென்றான்.

பாண்டியன், தன் பட்டத்தரசியான கோப்பெருந்தேவியுடன் அரசவையிலே அரியாசனத்தில் வீற்றிருந்தான். நடனக் கணிகையர் இருவர் மன்னன் காண நாட்டியமாடிக் கொண்டிருந்தனர். அவர்களின் ஆடலிலும் பாடலிலுமேயன்றி, அழகிலும் மனத்தைப் பறிகொடுத்து, மெய்ம் மறந்திருந்தான் பாண்டியன்.

(தொடரும்)

**(மயிலை இலக்கிய வட்டத்தில் நிகழ்த்திய சொற்பொழிவிலிருந்து.)**

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600 031.
Managing Editor: T. Sadasivam. Associate Editor: K. Rajendran.

ஆக்கசக்தி நெருக்கடியினால் ஏற்பட்ட சங்கடமான நிலை டாடா ஸ்டீலிலுள்ள எங்கள் இளம் நிபுணர்களுக்கு அதைத் திறம்பட சமாளிக்கும் ஆற்றலை அளித்தது.

ஆக்கசக்தி உபயோகத்தில் சேமிப்பு பற்றிய தீவிரமான ஆராய்ச்சிகள் பல புது வழிகளைப் புலப்படுத்தியுள்ளன. கம்பஸ்சன் ஏர் கண்ட்ரோல் ஸிஸ்டம்களைப் பல தொழிலிடங்களில் நிறுவி வியர்த்தமாகும் காஸினால் ஏற்படும் உஷ்ண நஷ்டத்தைக் குறைக்க வழி செய்யப்பட்டுள்ளது; தவிர எரிபொருள் தரமும் சீராக்கப்பட்டுள்ளது. தேவையான இடங்களில் வேஸ்ட்ஹீட் ரெகூப்பரேட்டர் ஸிஸ்டம்கள் மீண்டும் நிறுவப்பட்டிருப்பதோடு அவற்றின் செயலாற்றலை உச்சநிலைப் படுத்துவதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. ஃபர்னஸ்களில் இன்ஸுலேஷன் செய்யப்பட்டதோடு அவற்றில் காலத்திற்கேற்றவாறு புதுமைகள் செய்யப்பட்டுள்ளன. உச்சநிலையில் மறு-உபயோக முறைகளின் பயனாக குளிர்ச்சிக்கான தண்ணீர் பம்ப் செய்வது குறைக்கப்பட்டுள்ளது.

மொத்த உற்பத்திச் செலவில் மூன்றில் ஒரு பங்கு ஆக்கசக்திக்காகச் செலவிடும் தொழிற்துறையில் இந்த சேமிப்புகள் மிக மதிப்புள்ளவையாகும். காரணம், தாங்கமுடியாத ஆக்கசக்திச் செலவின் பளுவை சமாளிக்க இவை உதவுகின்றன.

இளமை மிடுக்கோடு இருப்பவர்கள் என்றென்றும் புதுப்புது சோதனைகளை வரவேற்பார்கள்.



## புதுப்புது சோதனைகள் எங்களுக்கு இளமையூட்டுகின்றன



டாடா ஸ்டீல்

TIS-1247 A

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேசிய காசு

# Plentiful Power for Peak Performance

# PERKINS 6-354

## Vehicular and Industrial diesel engines



**Vehicular Use:**
**Rated upto 120 B. H. P. at 2800 R. P. M.**

**Industrial Use:**
**Rated upto 90 B. H. P. at 2250 R. P. M.**

**P. 6-354 diesel engines are reliable, powerful, enduring and economical, with several plus features. Renowned for high economy, pulling power and inexpensive operational costs.**

**Provides unchallengeable power for Generators, Cranes, Excavators, Bulldozers, Agricultural Pumps etc.**

For PERKINS Engines
Simpsons®
Genuine Spare Parts

Contact:
Simpson & Co Ltd
202/203, Mount Road, Madras-600 002
Branches: Bangalore, Ootacamund, Tiruchirapalli & Secunderabad